# அருவியூர்
# நகரத்தார் குரல்

திங்கள் இரண்டுக்கு ஒன்று

ஆண்டு 27 - 163
சுபகிருது - தை

கல்வி பண்பாடு வளர்ச்சி இதழ்

ஜனவரி 2023


43 வது

## கல்விக்காவலர்



**தெய்வத்திருவாளர் அரு. கிருஷ்ணன் செட்டியார் - நலமுடன் திருமதி சாவித்திரி ஆச்சி**

அ. காளாப்பூர் - உளுந்தூருடையார்

**பெற்றோருக்கு பெருமை சேர்ப்பவர்கள்**

தவப்புதல்வர்கள் திருவாளர்கள்

K. அண்ணாமலை - ராதா

Dr. K. சோமசுந்தரம் - கீதா

K. மனோகரன் - ஜெயமீனா

K. நாகராஜன் - சௌந்திரநாயகி

தவப்புதல்வி: திருமதி விஜயலெட்சுமி - பாஸ்கரன்


வெளியீடு

அருவியூர் வடக்குவளவு நகரத்தார்

**கல்வி வளர்ச்சிக் கழகம் (பதிவு)**

பிரான்மலை

உ
நமது சமூகத்தின் கல்வி வளர்ச்சியே எமது தலையாய குறிக்கோள்
உதவுவோம்! பண்படுத்துவோம்! பாராட்டுவோம்!
பட்டம் பெற்றுத் தொழிலிற் சிறப்போம்!

# அருவியூர் நகரத்தார் குரல்



ஆண்டு 27
குரல்163

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து - குறள் 398

ஜனவரி - 2023
சுபகிருது-
மார்கழி - தை

**கழக நிர்வாகிகள்**
**தலைவர்**
செ. ஆசை அலங்காரம் - 96294 67287
**செயலாளர்**
மு. இராமலிங்கம் - 9943 01 7232
**பொருளாளர்**
சு. முத்து - 90430 10199

**நிர்வாகக் குழு**
**இணைத் தலைவர்கள்**
ஏ.பி. ஸேதுராமன் - 98422 89705
சொ. இராமனாதன் - 97155 100 0179
**துணைத் தலைவர்**
Ln. க. இளங்கோவன் - 94420 41340
**உறுப்பினர்கள்**
சொ. இளங்கோவன் - 94434 54173
ச. பழனியப்பன் - 90257 87637
சே. தவசீலன் - 98439 91517
ரா. வினோத்குமார் - 90038 00417

**உள் தணிக்கையாளர் :** R. வினோத்குமார்
Website Manager : S.S. Manian, DCE., Pudukkottai
website : www.avnsangams.co.in

**குரல் ஆண்டு சந்தா : ரூ.120/-**
**குரல் ஆயுள் சந்தா : ரூ.1800/-**

**குரல் நிறுவிய ஆசிரியர்**
திரு.சொ. வைத்திலிங்கம்
தொடக்கம் : 1997
**கௌரவ ஆசிரியர்**
திரு. M.S. முருகப்பன்
தலைவர் அ.வ.ந. பொதுநலச்சங்கம்

**குரல் பதிப்பாசிரியர்**
திரு செ. ஆசை அலங்காரம்
**ஆசிரியர் குழு**
திரு செ. ஆசை அலங்காரம்
Dr. சூரியகலா குமார்
V. கணேசன்
மற்றும் கழக நிர்வாகிகள்

கடிதம், செய்திகள், படைப்புகள் இவற்றை
அனுப்ப வேண்டிய முகவரி :
அருவியூர் நகரத்தார் குரல்,
அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்,
3, முதல் குறுக்குத் தெரு,
அழகப்பா காம்ப்ளெக்ஸ் பின்புறம்,
பொன்னமராவதி,
புதுக்கோட்டை - 622 407.
avnkalvi@gmail.com
அலுவலக வாட்ஸ்அப் : 87783 55837

## 2023 பொங்கல் மற்றும் புத்தாண்டு வாழ்த்துகள்



**பொங்கல் போல் புன்னகை பொங்கட்டும்!**
**மக்கள் மனமெல்லாம் மகிழ்ச்சி மலரட்டும்!**
**உள்ளம் எல்லாம் உற்சாகம் பரவட்டும்!**
**அன்பு நிறைந்து அகங்கள் மகிழட்டும்!**
**குறைகள் மறைந்து ஒற்றுமை ஓங்கட்டும்!**
**மங்காத நல்வாழ்வு யாவருக்கும் கிடைக்கட்டும்!**
**இனிய பொங்கல் நல்வாழ்த்துகள்!**

**- அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகிகள்**

# பொருளடக்கம்

தலைவர் சிந்தனை

**வணிகம் செய்வோம்!**
**வளம் பெறுவோம்!**

**செ. ஆசை அலங்காரம்** B.Sc.,
தலைவர்

**மக்கள் சேவையே! மகேசன் சேவை!**



நகரத்தார்கள் அனைவருக்கும் வணக்கம்.

நம் நகரத்தார்கள் அனைவருக்கும் இனிய ஆங்கில புத்தாண்டு வாழ்த்துக்களையும், இனிய பொங்கல் நல் வாழ்த்துக்களையும் அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகத்தின் சார்பில் தெரிவித்துக் கொள்வதில் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

நமது சமுதாயத்திற்கு நீண்ட நெடிய தொன்மையான வரலாறு உண்டு. உலகத்திற்கு நாகரிகத்தையும், வாழ்க்கை நெறிமுறைகளையும் போதித்த சமுதாயம் நமது சமுதாயம். தனவணிகர்களாக சிறப்போடு வாழ்ந்த நம் முன்னோர்கள் அரசன் மற்றும் அரசவைப் பிரதிநிதிகளைப் போல் தங்களின் மாளிகையில் மாடங்கள் அமைத்து கொள்ளும் பெருமைக்குரிய உரிமையோடு வாழ்ந்த சமுதாயம் நம் சமுதாயம். அதேபோன்று நம்மை அடையாளப்படுத்த நமக்கென்று தனிக்கொடி–சிங்கக் கொடி உண்டு. நம் முன்னோர்கள் கடல்கடந்து சென்று அயல்நாடுகளில் வணிகம் செய்தார்கள். அவர்களின் கடல் வணிகத்தில் அவர்களையும் அவர்கள் வணிகத்திற்கு கொண்டு செல்லும் நவரத்தினங்களையும் கடற்கொள்ளையர்களிடமிருந்து பாதுகாக்க ஒரு கடற்படையை (Navy) மன்னர் வழங்கி சிறப்பித்தார் என்ற பெருமையும் நம் முன்னோர்களுக்கு இருந்தது. நற்குடிகள் என்று போற்றப்பட்ட நம் முன்னோர்கள் மன்னரின் முடிசூட்டு விழாவில் மணிமகுடத்தை மன்னருக்கு சூட்டும் உயரிய அந்தஸ்தோடு வாழ்ந்த சமுதாயம் நம் சமுதாயம்.

நற்குடிகளாக பாண்டிய மன்னரால் அழைத்து வரப்பெற்ற நம்மவர்கள் அரிவையூர் பட்டணத்தை அன்னை மீனாட்சி அருளாட்சி புரியும் மதுரைப் பட்டணத்தைப் போல் கோவிலைச் சுற்றி வீதிகளை, அழகுற அமைத்து அரிவையூர் பட்டணத்தை நிர்மாணம் செய்தார்கள். இவ்வூர் அ.காளாப்பூருக்கு அருகில்

இருந்தது. அங்கு தொழில் தர்மத்தை சிறிதும் பிறழாது கடைப்பிடித்து வணிகத்தைச் செய்து செல்வச் செழிப்போடு வாழ்ந்து வந்தார்கள். மொகலாயர்களின் படையெடுப்பில் அரிவையூர் பட்டணம் அழிக்கப்பட்டது. கோவில்கள் சிதைக்கப்பட்டன. நம்மவர்களின் செல்வங்கள் எல்லாம் கொள்ளையடிக்கப்பட்டன என்பது வரலாற்று உண்மை. அதன்பின் நம்மவர்கள் கொள்ளையர்களுக்கு அஞ்சி மலை மறைவு பகுதிகளில் மறைந்து வாழ்ந்து வந்தார்கள் என்பது நம்முடைய வரலாறு.

அரிவையூர் பட்டணத்தில் நம் முன்னோர்கள் செல்வச் செழிப்போடு சிறப்பாக வாழ்ந்தார்கள். அரசவைப் பிரதிநிதி களுக்குரிய அத்தனை சலுகைகளையும் உரிமைகளையும் பெற்று சிறப்பாக வாழ்ந்தார்கள். நம்மவர்களின் பெருமைக்குரிய வரலாற்றை ஊரறிய உலகறியச் செய்ய வேண்டியது நமது கடமையாகும். அதற்கு என்ன செய்யலாம், எப்படிச் செய்யலாம், எங்கு செய்யலாம் என தெற்குவளவு நகரத்தார் சங்கச் செயலாளர் திரு KR. கணேசன் அவர்களிடம் ஒருமுறை கலந்துரையாடும் சந்தர்ப்பம் கிடைத்தது. அவரும் அதே சிந்தனையில் இருந்ததை அப்போது என்னால் அறிந்து கொள்ள முடிந்தது. அப்போது அவர் கூறியதாவது. “அரிவையூர் பட்டணத்தில் நாம் நன்றாக, ஒற்றுமையாக வாழ்ந்தோம். தெற்கு – வடக்கு என்கிற பிரிவினை பின்னால் ஏற்பட்டது. பெருமைக்குரிய நம் முன்னோர்கள் வாழ்ந்த அரிவையூர் பட்டணத்திற்கு அருகில் உள்ள அ. காளாப்பூரில் நம்மவர்களின் வரலாற்றுப் பெருமையை பறைசாற்றும் வகையில் ஒரு நினைவுச் சின்னம் (ஸ்தூபி) எழுப்புவோம். அதற்கான முயற்சிகளை நாம் இரண்டு சமுதாயமும் சேர்ந்து மேற் கொள்வோம்” எனக் கூறினார்.

மேலும் தான் சார்ந்துள்ள தெற்குவளவு நகரத்தார்களின் முழு ஒத்துழைப்பையும் ஆதரவையும் பெற்றுத் தருவது தனது பொறுப்பு என்கிற உறுதியையும், உத்திரவாதத்தையும் எனக்களித்தார். அவரின் எண்ண ஓட்டமும், எனது எண்ண ஓட்டமும் ஒரே மாதிரியாக இருந்ததும், ஒத்துப்போனதும் எனக்கு மகிழ்ச்சியைத் தந்தது. நானும் எங்கள் சமுதாயத்தில் உள்ள பெரியவர்களிடமும், பொதுநலச் சங்க நிர்வாகிகளிடமும் பேசி

ஒரு நல்ல முடிவு எடுப்போம் எனக் கூறி விடைபெற்று வந்தேன். அரிவையூர் பட்டணம் எவ்வாறு அழிக்கப்பட்டதோ அதே போன்று நம்முடைய பெருமைகளும், வரலாறுகளும் பல்வேறு கால கட்டங்களில் பலவாறாக அழிக்கப்பட்டுள்ளன என்பதை கல்வெட்டு ஆராய்ச்சியாளர் திரு பாபு பத்மநாபன் அவர்கள் கடந்த பொதுக்குழுக் கூட்டத்தில் ஆதாரத்தோடு எடுத்துக் கூறினார். அழிந்த வரலாற்றை தேடிக் கண்டுபிடித்து புதுப்பிக்க வேண்டியது நமது கடமையாகும்.

நம்மவர்களின் வரலாற்றுப் பெருமைகளையும், சிறப்புகளையும் விளக்கும் வண்ணம் ஒரு **நினைவு ஸ்தூபி** எழுப்ப வேண்டும். அது பெருமையோடும், சிறப்போடும் வாழ்ந்த நமது சமுதாயத்திற்கும் நம் முன்னோர்களுக்குச் செய்யும் உண்மையான மரியாதையாகும். இந்த முயற்சிக்கு அனைவரையும் அழைக்கின்றேன். ஒன்றுபட்டு செயலாற்றுவோம்! ஒரு நினைவு ஸ்தூபி எழுப்புவோம் என உறுதி ஏற்போம்!! என அனைவரையும் அன்போடு வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். இது குறித்து நமது அ.வ.ந. பொதுநலச் சங்கம் பரிசீலித்து நல்ல முறையில் இதற்கான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் என்று நம் சமுதாய வரலாறு பேணப்பட வேண்டும் என்கிற அக்கறையில் கேட்டுக் கொள்கின்றேன். வாழ்க வளமுடன்! வாழ்க நலமுடன்!!

### பெற்றோர்கள் மற்றும் மாணவர்களின் கவனத்திற்கு

ஹரிச்சந்திரா நாடகத்தைப் பார்த்த பின்பு தான் காந்தியடிகள் சத்தியவழியில் வாழத் தலைப்பட்டார். மனிதராக இருந்த காந்தியை மகாத்மாவாக – தேசத்தந்தையாக – உலகம் போற்றும் உத்தமராக மாற்றிய வல்லமை ஒரு நாடகத்திற்கு இருந்தது. அதேபோன்ற வல்லமை நம்முடைய அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகத்தின் ஆண்டுவிழா மற்றும் மாணவ மாணவிகளுக்கான பரிசளிப்பு விழாவிற்கும் உண்டு. பரிசு பெறாத பிள்ளைகளையும் இவ்விழாக்களுக்கு அழைத்து வருமாறு பெற்றோர்களை கேட்டுக் கொள்கின்றேன். அவ்வாறு அவர்களை அழைத்து வரும்போது அவர்கள் மற்றவர்கள் பரிசும், பாராட்டும், பதக்கமும் பெறுவதைப் பார்க்கும்போது தாமும் இது போன்ற பரிசுகளைப் பெற வேண்டும் என்கிற எண்ணம் உருவாகி அவர்களின் வாழ்க்கையில் திருப்பு

முனையை ஏற்படுத்தும் தளமாக இவ்விழாவின் நிகழ்வுகள் அமையும். எனவே பரிசும் பாராட்டும் பெறுபவர்களைப் போலவே பரிசு பெறாதவர்களின் பெற்றோர்களும் தங்களின் பிள்ளைகளை இவ்விழாவிற்கு அழைத்து வர வேண்டும் என அன்போடு மீண்டும் ஒருமுறை கேட்டுக் கொள்கிறேன்.

உரிய காலத்தில் மதிப்பெண் பட்டியலை (Mark sheet) அனுப்பி வைக்க வேண்டுமாய் கேட்டுக்கொள்கிறேன். ஏனெனில் பல மாணவர்கள் தங்களுடைய மார்க் சீட்டை மிகத் தாமதமாக அனுப்பிவைப்பதால் பரிசளிப்பு விழாவிற்குரிய பதக்கங்கள், சான்றுகள், அழைப்பிதழ் எல்லாம் தயார் செய்த பின்னர் எங்களுக்கு வந்து சேருகிறது. ஒரிருவர் ஆண்டுவிழா அழைப்பிதழ் அனுப்பி வைக்கப்பட்ட பின்னர் அதைப் பார்த்து மதிப்பெண் பட்டியலை அனுப்பியுள்ளார்கள். நல்ல மதிப்பெண்கள் பெற்று பரிசு பெறுவதற்கு தகுதிகள் இருந்தும், தங்களுடைய தாமதத்தால் பரிசுகளை மாணவர்கள் பெற இயலாத நிலை ஏற்பட்டு வருகிறது. இது எங்களுக்கு வருத்தத்தை அளிக்கிறது. எனவே உரியகாலத்தில் அசல் மதிப்பெண் பட்டியல் தங்கள் கைக்கு கிடைத்தவுடன் அதனை நகலெடுத்து கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு அனுப்பி வைக்க வேண்டுமாய் மீண்டும் வலியுறுத்திக் கேட்டுக் கொள்கிறேன்.

## ஆலிவ் ஆயிலின் நன்மைகள்



1. ஆரோக்கியமான மோனோசாச்சுரேட்டட் கொழுப்புகள் நிறைந்தவை
2. அதிக அளவு ஆன்டி ஆக்ஸிடன்டுகள் உள்ளன.
3. வலுவான அழற்சி எதிர்ப்பு பண்புகளைக் கொண்டு
4. பக்கவாதம் வராமல் தடுக்க உதவுகிறது.
5. இதய நோய்க்கு எதிரான பாதுகாப்பு
6. எடை அதிகரிப்பு மற்றும் உடல் பருமன் ஆகியவற்றுடன் தொடர்புபடுத்தப்படவில்லை.

**- D. நிருபமா M.Tech. அண்ணா பல்கலைக்கழகம், சென்னை.**

# கல்வி வளர்ச்சிக் கழக அறிவிப்புகள்

மு. இராமலிங்கம், செயலாளர், அலுவலகம் - 87783 55837.

1. தொடர்புக்கு : மு. இராமலிங்கம், செயலாளர்.

வாட்ஸ் அப் எண். 9943017232

அலுவலக வாட்ஸ்அப் எண். 87783 55837.



| வரிசை எண். | கடன் பெற்றவர் பெயர் | ஊர் | பெற்ற கடன் தொகை | கடன் முழுவதும் செலுத்திய தொகை |
|---|---|---|---|---|
| 1. | செ. ஆசை அலங்காரம் | கோவை | 30,000 | 30,000 |
| 2. | ப. சந்தோஷ்குமார் | திண்டுக்கல் | 40,000 | 40,000 |
| 3. | ரா. பத்மபிரியா | திண்டுக்கல் | 30,000 | 30,000 |
| 4. | மு. சௌந்தர்யா | தஞ்சாவூர் | 20,000 | 20,000 |
| 5. | ர. நாகவர்ஷினி | சென்னை | 10,000 | 10,000 |
| 6. | ச. மணிவாசகம் | தஞ்சாவூர் | 10,000 | 10,000 |
| 7. | ரா. ஹரிஸ் | தஞ்சாவூர் | 30,000 | 30,000 |
| 8. | சே. கார்த்திக் | சிங்கம்புணரி | 20,000 | 20,000 |
| 9. | B. சுந்தர் | சோமனூர் | 20,000 | 20,000 |
| 10. | க. அருண்நந்தகுமார் | திண்டுக்கல் | 10,000 | 10,000 |
| 11. | வி. தீபக் | கொட்டாம்பட்டி | 26,000 | 26,000 |
| 12. | ப. முத்தமிழ்செல்வன் | கோவை | 30,000 | 30,000 |
| 13. | ப. மணிகண்டன் | ஆலவயல் | 30,000 | 30,000 |
| 14. | தெ. பிரவீன் | பொன்னமராவதி (வி.புதூர்) | 40,000 | 40,000 |
| 15. | மகேஷ் கண்ணன் | கோவை | 30,000 | 30,000 |
| 16 | தியாகராஜன் | துவரங்குறிச்சி | 10,000 | 10,000 |
| 17. | தரணி | செனனை | 35,000 | 35,000 |

2020-2021 வரை கல்வி வளர்ச்சிக் கழகம் மூலம் 52 மாணவர்களுக்கு பட்ட மேற்படிப்பு படிப்பதற்கு கடன் வழங்கப் பட்டுள்ளது. அதில் மேற்கண்ட 14 மாணவர்கள் தங்களின் படிப்பு முடிந்து பெற்ற கடன்தொகை முழுவதும் செலுத்தி தாய் தந்தையருக்கும் பெருமை சேர்த்துள்ளனர். இதுபோல் மற்ற 38 மாணவர்கள் தாங்கள் பெற்ற கடனை சிறிது சிறிதாக செலுத்தி

கடன் முழுவதையும் தீர்க்குமாறும் பிற படிக்கின்ற மாணவர்களுக்கு உதவி செய்யுமாறும் அன்புடன் கேட்டுக் கொள்ளப்படுகிறது.

பணம் செலுத்தியவுடன் தகவல் தெரிவிக்க வேண்டிய வாட்ஸ்அப் எண்.99430 17232, மு. இராமலிங்கம், செயலாளர்.

**வங்கி கணக்கு விபரம்**

| | | |
|---|---|---|
| கணக்கின் பெயர் | : | அருவியூர் வடக்குவளவு நகரத்தார் கல்வி வளர்ச்சிக் கழகம் (AVN KALVI VALARCHI KAZHAGAM) |
| வங்கி/கிளையின் பெயர் | : | இந்தியன் பேங்க், புதுப்பட்டி |
| கணக்கு எண் | : | 493740102 |
| IFSC | : | IDIB000P052 |

**– செயலாளர், அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம், பொன்னமராவதி**

## செய்யக் கூடாத செயல்கள்



- வெறுங்கையாகும் அளவிற்கு தர்மம் செய்யாதே..!
- முகம் சிவக்கும் அளவிற்கு கோபம் கொள்ளாதே...!
- குறுக்கு வழிக்குப் போகுமளவிற்கு பொறாமையை வளர்க்காதே..!
- மனம் வலிக்குமளவிற்கு வார்த்தையை விடாதே...!
- அடிமையாகும் அளவிற்கு அன்பை செலுத்தாதே...!
- சண்டை உண்டாகுமளவிற்கு விவாதத்தை தொடராதே...!
- அமைதியை கெடுக்குமளவிற்கு ஆசையை சேர்க்காதே...!
- பலிவாங்கும் அளவிற்குப் பகையை வளர்க்காதே...!
- மனம் வெறுக்கும் அளவிற்கு செயல்கள் செய்யாதே...!
- கண்ணீர் வடியுமளவிற்கு கவலைப்படாதே...!

**S. இளையராஜா, கோவை. செல் : 9787115503**

# அருவியூர் வடக்குவளவு நகரத்தார் கல்வி வளர்ச்சிக் கழக பொதுக்குழு கூட்ட நிகழ்வுகள்

அருவியூர் வடக்குவளவு நகரத்தார் கல்வி வளர்ச்சிக் கழகத்தின் 41-ம் ஆண்டு விழா பொதுக்குழு கூட்டம், மாணவர்களுக்கான பரிசளிப்பு பாராட்டு விழா, நன்கொடையாளர்களுக்கான பாராட்டுவிழா என முப்பெரும் விழாவாக பிரான்மலை மங்கைநாயகர் மன்றத்தில் 25.12.2022 அன்று ஞாயிற்றுக் கிழமை காலை 10-00 மணியளவில் சீரோடும் சிறப்போடும் நடைபெற்றது.

கல்வி வளர்ச்சிக் கழகத்தின் தலைவர் திரு செ. ஆசை அலங்காரம் அவர்கள் தலைமையிலும், பிரான்மலை அ.வ.ந. பொதுநலச்சங்க தலைவர் திரு M.S. முருகப்பன் செட்டியார், அவர்கள் முன்னிலையிலும் நடைபெற்றது. சிறப்பு விருந்தினர்களாக முன்னாள் பொதுநலச் சங்கத் தலைவர்கள் திரு மு.ந. இராமனாதன் செட்டியார் அவர்களும், Er.M. மாணிக்கம் செட்டியார் அவர்களும், அனைத்து ஊர் அ.வ.ந. சங்க நிர்வாகிகளும், அனைத்து ஊர் நகரத்தார் பெருமக்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர். திரு வே. கணேசன் செட்டியார் அவர்களின் இறை வணக்கத்துடன் பொதுக்குழுக் கூட்டம் ஆரம்பமானது. அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழக இணைத் தலைவர் திரு A.P. ஸேதுராமன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள்.

அருவியூர் வடக்குவளவு நகரத்தார்களின் சமூக சேவகர் (410 திருமண ஜோடிகளை இணைத்தவர்) தெய்வத்திரு P.L.R. என்கிற PL. ரெங்கசாமி அவர்களின் திருஉருவப்படத்தை அ.வ.ந. பொதுநலச் சங்கத் தலைவர் திரு M.S. முருகப்பன் அவர்கள் திறந்து வைத்தார்கள். கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகிகளும், பொதுநலச் சங்க முன்னாள் தலைவர் களும், நிர்வாகிகளும் திருஉருவப் படத்திற்கு மலரஞ்சலி செலுத்தினார்கள்.

அதனைத் தொடர்ந்து திரு செ. ஆசை அலங்காரம் அவர்கள் தலைமை உரையை நிகழ்த்த, செயலாளர் திரு மு. இராமலிங்கம் அவர்கள் ஆண்டறிக்கையை வாசித்தார். பின்னர் பொருளாளர் திரு S. முத்து அவர்கள் கல்வி வளர்ச்சிக் கழகம் மற்றும் நகரத்தார் குரல் தொடர்பான வரவு செலவு அறிக்கையை தாக்கல் செய்ய, திரு ரா. வினோத்குமார் அவர்கள் தணிக்கை அறிக்கையை சமர்ப்பித்தார்.

அ.வ.ந. பொது நலச்சங்கச் தலைவர் திரு M.S. முருகப்பன் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். முன்னாள் பொதுநலச் சங்கத்

தலைவர்களும், பொதுக்குழு உறுப்பினர்களும் வாழ்த்துரை வழங்கினார்கள்.

விழா இறுதியில் அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகக் குழு உறுப்பினர் திரு சொ. இளங்கோவன் அவர்கள் நன்றியுரை ஆற்றினார்.

**பொதுக்குழு கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.**

**தீர்மானம்:1**

அ.வ.ந. பொதுநலச் சங்க நிர்வாகத்தின் கீழ் கட்டுப்பட்ட சிங்கம்புணரி ஸ்ரீ மீனாட்சி-தெய்வானை வளாக இடத்தில் அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு அலுவலகக் கட்டிடம் கட்ட இடம் ஒதுக்கித் தர வேண்டுமாய் அ.வ.ந. பொதுநலச் சங்கத்திடம் அனுமதி பெற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

**தீர்மானம்:2**

அ.வ.ந. பொதுநலச் சங்கம் சிங்கம்புணரி ஸ்ரீ மீனாட்சி-தெய்வானை வளாக இடத்தில் அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழக அலுவலகத்திற்கு கட்டிடம் கட்ட இடம் அளிக்கும் பட்சத்தில் அதில் அலுவலகக் கட்டிடம் கட்டலாம் என அனுமதி அளித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

**தீர்மானம்:3**

தாய்-தந்தை இருவரையும் இழந்த 6 முதல் 12-ம் வகுப்பு பயிலும் மாணவ-மாணவிகளுக்கு பயிலும் காலம் வரை ஆண்டுதோறும் ரூ.2000/- (ரூபாய் இரண்டாயிரம்) மட்டும் இலவசமாக வழங்குவதற்கு ஒப்புதல் அளித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டன.

**தீர்மானம்:4**

தாய்-தந்தை இருவரையும் இழந்த, கல்லூரியில் பயிலும் மாணவ - மாணவிகளுக்கு ஆண்டுதோறும் அவர்கள் கல்வி பயிலும் காலம் வரை இலவசமாக ரூ.10,000/- (ரூபாய் பத்தாயிரம் மட்டும்) வழங்கவும். தாய் அல்லது தந்தை இருவரில் ஒருவர் இல்லாத நிலையில் கல்லூரியில் பயிலும் மாணவ - மாணவியருக்கு ஆண்டுதோறும் ரூ.5,000/- (ரூபாய் ஐந்தாயிரம் மட்டும்) நிபந்தனைக்கு உட்பட்டு இலவசமாக வழங்க ஒப்புதல் அளித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டன.

**தீர்மானம்:5**

B.E.,M.B.B.S.,C.A. போன்ற தொழிற்கல்வி படிப்புகளுக்கு கல்விக் கடன் கோரும் மாணவர்களின் பொருளாதார நிலையை நன்கு பரிசீலித்து; தகுதி இருப்பவர்களுக்கு மட்டும் கல்விக் கடனாக ரூ.10,000/- (ரூபாய் பத்தயிரம் மட்டும்) வழங்கும் பொருட்டு பரிந்துரை செய்ய குழு ஒன்றை அமைப்பதற்கு ஒப்புதல் அளித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

விழா நிகழ்ச்சியின் போது சாதனையாளர்கள், இளம் சாதனையாளர்கள் பாராட்டப்பட்டனர். செய்தித் தொடர்பாளர்கள், குரல் வாசகர்கள், சிறந்த படைப்பாளர்கள் பாராட்டப்பட்டனர்.

12 மற்றும் 10-ம் வகுப்புகளில் முதல் மூன்று இடங்களைப் பெற்ற (85% மதிப்பெண்ணுக்கு மேல்) மாணவ மாணவிகளுக்கு ரூ. 12000, ரூ. 9000, ரூ. 6250 மதிப்புள்ள தங்கப் பதக்கங்கள் வழங்கப்பட்டு பாராட்டப்பட்டனர்.

M.B.B.S., B.E., C.A., முதலிய பட்டப்படிப்புகளில் முதலிடம் பெற்றவர்களுக்கு ரூ.12000 மதிப்புள்ள தங்கப்பதக்கம் வழங்கப்பட்டு பாராட்டப்பட்டனர்.

இது தவிர M.B.B.S., B.E., C.A.,12-ம் வகுப்பு மற்றும் 10-ம் வகுப்புகளில் (80% மதிப்பெண்ணுக்கு மேல்) பெற்ற மாணவ-மாணவிகளுக்கு வெள்ளிப் பதக்கங்கள் வழங்கப்பட்டன.

**– மு . இராமலிங்கம், செயலாளர், அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்**

---

# எது முக்கியம்?



- பெற்றோரை விட யாரும் முக்கியமானவர் இல்லை.
- வேலையில் திறமையை விட படித்த படிப்பு முக்கியமானது இல்லை.
- ஆரோக்கியத்தை விட பணத்தை சேர்ப்பது முக்கியமானது இல்லை
- மனது வலிமையாக இருப்பதை விட உணர்ச்சிகரமான முட்டாளாக இருப்பது முக்கியமானது இல்லை.
- உண்மையை விட கண்ணுக்கு எதிரில் தெரிவது முக்கியமானது இல்லை.
- அமைதியைவிட ஆரவாரம் முக்கியமானது இல்லை.
- எளிமையை விட ஆடம்பரம் முக்கியமானது இல்லை.
- நிஜ வாழ்க்கையை விட சமூக வலைத்தளங்கள் முக்கியமானது இல்லை.
- அக அழகைவிட புறஅழகு முக்கியமானது இல்லை.

# 43 வது கல்விக்காவலர் வாழ்க்கை வரலாறு



இந்த மாத அட்டைப்படத்தை அலங்கரிப்பவர்கள் 43-வது கல்விக்காவலர் அருவியூர்ப்பட்டினம் காளாப்பூரைப் பூர்வீகமாகக் கொண்ட (உளுந்தூருடையார்) தெய்வத்திரு அரு. கிருஷ்ணன் செட்டியார் - நலமுடன் சாவித்திரி ஆச்சி ஆகியோர்கள். இவர்கள் திரு அ. அருணாசலம் செட்டியார் - திருமதி அமிர்தவள்ளி ஆச்சியின் இளைய மகன் - மருமகளாவர். நமது கல்விக்காவலர் விவசாயம், தையல், மனோகரன் ஜவுளி ஸ்டோர், சோமசுந்தரம் பேங்கர்ஸ், ரியல் எஸ்டேட் எனப் படிப்படியாக பல தொழில்களைச் சொந்த ஊரிலேயே திறம்பட நடத்தி வந்தவர். காளாப்பூரில் செல்வ விநாயகர் ஆலயத்தை மறு நிர்மாணித்து 1993-ம் ஆண்டில் அன்றைய பொதுநலச் சங்கத் தலைவர் தெய்வத்திரு நல்ல சுப்பையா முன்னிலையிலும், மற்றும் 2010 ஆம் ஆண்டில் மீண்டும் கும்பாபிஷேகம் செய்வித்தவர். ஐயப்ப பக்தர். 36 வருடங்களுக்கும் மேலாக சபரிமலை சென்று வந்தவர்.

தனது பிள்ளைகளின் எதிர்காலத்தைச் சிறந்த கல்வி ஒன்றே ஒளிமயமாக்கும் என்ற தொலைநோக்கு சிந்தனையுடன், தனது பிள்ளைகள் அனைவரையும் நன்றாகப் படிக்க வைத்தார். அவர்கள் அவரவர் துறைகளில் சிறப்புடன் பணி செய்து வருகிறார்கள். இவர்களது இரண்டு மகன்களும், ஒரு மகளும் சிங்கப்பூரிலும், மூன்றாமவர் சென்னையிலும், இளையவர் சொந்த ஊரிலும் வசித்து வருகிறார்கள்.

இவர் 29.04.1985-ல் கல்வி வளர்ச்சிக் கழகத்தில் ஆயுள் உறுப்பினராக இணைந்தார். கல்வித் தந்தை - கல்வித் தாயாக இணைந்த இவர்கள் 01.01.1999 அருவியூர் நகரத்தார் குரலில் அட்டைப்படத்தில் பிரசுரிக்கப்பெற்று சிறப்பு செய்யப்பட்டனர். கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு நன்கொடைகள் வழங்கியுள்ளார்.

## மூத்த மகன் K. அண்ணாமலை

மூத்த மகன் K. அண்ணாமலை கல்வி வளர்ச்சிக் கழகம் தொடங்கிய ஆண்டில் 10-ம் வகுப்பில் முதல் மாணவராகத் தேர்ச்சி பெற்றவர். இந்தியாவில் B.E. (Civil), M.E. (Structural Engg) முடித்து பிறகு, சிங்கப்பூரில் National University of Singapore-ல் M.Sc. (Building Science) முடித்து SUCCESS Engineering & Steel Pte Ltd (https://linktr.ee/SUCCESSEngineering) என்கின்ற தொழில் நிறுவனத்தை, மனைவி திருமதி ராதா அண்ணாமலை B.Com. ன் துணையோடு 15 வருடங்களாக சிறப்பாக நடத்தி வருகின்றார். இவரும் ஒரு ஐயப்ப பக்தர். 15 வருடங்களுக்கு மேலாக சபரிமலை சென்று வருகிறார். தனது பிள்ளைகள் அனைவரையுமே முடிந்த பொழுதெல்லாம் சபரிமலை கூட்டிச் சென்றுள்ளார்.

K. அண்ணாமலையின் மூத்த புதல்வர் அ. மணிகண்டன் சிங்கப்பூர் National University of Singapore-ல் M.Sc. (Structural Engineering) முடித்து Web Structures Pte Ltd ல்,Structural Engineer ஆகப் பணிபுரிந்து வருகிறார். மகள் Dr. அ. கார்த்திகா University College Cork, அயர்லாந்து நாட்டில் M.B.B.S. முடித்து, இங்கிலாந்தின் Kettering General Hospital-ல் Junior Doctor ஆக பணியாற்றி வருகிறார். மூன்றாவது மகன் அ. கண்ணன், National University of Singapore, School of Computing-ல் Computer Science & Business Management, double degree தொடர இருக்கிறார். இளைய மகன் அ. ரூபேஸ்வரன் GCE 'A' Level முடித்து இரண்டாண்டுகள் NS Army-ல் சேவையாற்ற இருக்கிறார்.

அ. மணிகண்டனின் B.E.(Civil) இறுதியாண்டு Project work ஆனது 1st Place Prize in the Innovation in Public Transportation Competition 2021, organised by Asia-Pacific Economic Cooperation (APEC) (https://tinyurl.com/35afxf2x) முதல் பரிசினை வென்றது. இவர் B.E.(Civil) படிக்கும் பொழுது Dean's List ல் இடம் பெற்று முதல் 5% ல் தேர்ச்சி பெற்றார்.

Singapore Indian Development Association (SINDA) Excellence award பெற்றவர்கள். அ. மணிகண்டன் B.E. (Civil) Honours (Highest Distinction)-2021, அ.கார்த்திகா GCE-A Level-2017, அ. கண்ணன் -NUS High Diploma with Honours(High Distinction)-2021. அ. ரூபேஸ்வரன் GCE-A Level-2022, EDUSAVE CERTIFICATE OF ACADEMIC ACHIEVEMENT 2022, National Junior College, from Ministry of Education, Singapore பெற்றிருக்கிறார்

## இரண்டாவது மகன் K. மனோகரன்

பொறியாளர் K. மனோகரன் D.C.E., A.M.I.E. (India) சிங்கப்பூரில் ஒரு தனியார் நிறுவனத்தில் கட்டிட திட்ட மேலாளராக (Project Manager) பணி புரிகிறார். மனைவி திருமதி ஜெயமீனா மனோகரன் ஒரு உணவு நிறுவனத்தில் காசாளராக (Cashier) பணி புரிகிறார். இத்தம்பதியருக்கு அருண் மற்றும் விக்னேஷ் என்ற இரு புதல்வர்கள். பெரியவர் அருண் சிறப்பு தேவை உடையவர். இளையவர் விக்னேஷ் தற்போது முழு நேர தேசிய சேவை செய்கிறார். (NS Army) தேசிய சேவை முடிந்தவுடன் National University of Singapore B.E. (Civil) படிப்பை மேற்கொள்ள இருக்கிறார்.

## மூன்றாவது மகன் K. சோமசுந்தரம்

முனைவர் K. சோமசுந்தம் B.E.(ECE), M.E.(CSE), Ph.D.(CSE) கணினி பொறியியல் துறையில் முனைவர் பட்டம் பெற்று, சென்னையில் உள்ள நிகர் நிலை பல்கலைக் கழகம் ஒன்றில் கணினி பொறியியல் துறையில் பேராசிரியராக சிறப்பாக பணிபுரிந்து வருகிறார். மனைவி திருமதி கீதா சோமசுந்தம் D.Pharm / B.Com., M.B.A. மருந்து ஆளுநர் பட்டயம் பெற்று உள்ளார்.

இவர்களது மகன் K.S. கிஷோர் தற்பொழுது மூன்றாம் ஆண்டு M.B.B.S. சென்னையில் பயின்று வருகிறார். இரண்டாவது மகன் K.S. கிருத்திக் இந்தியாவின் என்டிஎஸ்சி (NTSC - National Talent Search Exam) 2020-ஆம் ஆண்டில் நடைபெற்ற போட்டித் தேர்வில் வெற்றியடைந்தார். NTSC Scholarship மூலம் இவர் +1 படிப்பிலிருந்து ஆராய்ச்சி படிப்பு ( +1 to Ph.D.) வரை ஸ்காலர்ஷிப் பெறும் தகுதி பெற்றுள்ளார். தற்பொழுது K.S. கிருத்திக் அகில இந்திய அளவில் நடைபெற்ற JEE (Advanced)-2022 தேர்வில் தகுதி பெற்று புவனேஸ்வர், ஒடிசா ஐஐடியில் (Indian Institute of Technology) B.Tech Mechanical Engineering முதலாம் ஆண்டு படித்துக் கொண்டிருக்கிறார்.

## இளையமகன் திரு K. நாகராஜன்

இளையமகன் திரு K. நாகராஜன் B.Pharm., தந்தையின் வழியில் சொந்த ஊரிலேயே ARK ஜுவல்லரி, மீனாட்சி பேங்கர்ஸ் மற்றும் ரியல் எஸ்டேட் தொழில்களை சிறப்போடு நடத்தி வருகிறார். இவரது துணைவியார் திருமதி சௌந்திர நாயகி M.Sc. Information Technology. மூத்த மகன் N. பிரவீன்

சென்னையில் +1 ம் வகுப்பும் இளைய மகன் N. கதிரவன் காரைக்குடியில் CBSE-ல் பயின்று வருகிறார்கள். மகள் N. சுடர்விழி, மழலைச் செல்வம்.

## மகள் திருமதி விஜயலெட்சுமி - திரு R. பாஸ்கரன்

மகள் விஜயலெட்சுமி **Dip. in Human Excellence and Yoga** கணவர் திரு R. பாஸ்கரன் **D.M.E. ASNT NDT Level 3 (USA) PCN NDT Level 3 (UK)/ CSWIP WI level 3 (UK),** மகள்களுடன் கடந்த 20 வருடங்களாக சிங்கப்பூரில் சிறப்புடன் வாழ்ந்து வருகிறார். பொறியாளர் திரு பாஸ்கரன் சிங்கப்பூரில் Technical Director ஆக ஒரு நிறுவனத்தில் பணிபுரிகிறார். மனைவி விஜயலட்சுமி கணவரது நிறுவனத்தில் உதவி செய்கிறார். இருவரும் யோகா கலையில் தேர்ச்சி பெற்று யோகா ஆசிரியராகப் பகுதி நேரமாக சேவை செய்கிறார்கள்.

மூத்த மகள் ரம்யா அயர்லாந்து நாட்டில் University College Cork p M.B.B.S. இறுதி ஆண்டு படிக்கிறார். இரண்டாவது மகள் B. ஜோதிகா சிங்கப்பூர் National University of Singapore-ல் B.Sc.,(Psychology, Honours Degree) மூன்றாவது ஆண்டு படிக்கிறார். இளையமகள் B. பிரியங்கா சிங்கப்பூரில் உள்ள ஒரு பள்ளியில் படித்து வருகிறார்.

# 43-வது கல்விக்காவலர்



தெய்வத்திருவாளர் அரு. கிருஷ்ணன் செட்டியார்
-நலமுடன் திருமதி சாவித்திரி ஆச்சி
அ. காளாப்பூர்-உளுந்தூருடையார்
பெற்றோருக்கு பெருமை சேர்ப்பவர்கள்
தவப்புதல்வர்கள் திருவாளர்கள்
K.அண்ணாமலை-ராதா
K.மனோகரன்-ஜெயமீனா
Dr. K. சோமசுந்தரம்-கீதா
K. நாகராஜன்-சௌந்திரநாயகி
தவப்புதல்வி: திருமதி விஜயலெட்சுமி-பாஸ்கரன்
வெளியீடு
அருவியூர் வடக்குவளவு நகரத்தார்
கல்வி வளர்ச்சிக் கழகம்(பதிவு)
பிரான்மலை

SUCCESS

https://linktr.ee/SUCCESSEngineering



K.அண்ணாமலை-ராதா குடும்பத்தினர்



K.மனோகரன்-ஜெயமீனா குடும்பத்தினர்



Dr. K. சோமசுந்தரம்–கீதா குடும்பத்தினர்



K. நாகராஜன்–சௌந்திரநாயகி குடும்பத்தினர்



விஜயலெட்சுமி–பாஸ்கரன் குடும்பத்தினர்

# படித்ததில் பிடித்தது - 3

திரு சொ. வைத்திலிங்கம், மதுரை



மனிதர்களை விட மரங்கள் நம்மைப் புரிந்து கொள்ளும்.

**ஒரு சிறு முன்னுரை**

மரங்களுக்கும் உயிர் உண்டு என்பது விஞ்ஞான பூர்வமாக நிரூபிக்கப்பட்ட உண்மை. மரங்கள் நாம் பேசுவதைக் கேட்கும். பேச்சைப் புரிந்து கொள்ளும். நமது விருப்பத்தை நிறைவேற்றும். உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறதா? நம்ப முடியவில்லையா? எனது பெண் உறவினர் ஒருவர் எனக்கு அனுப்பியுள்ள ஒரு செய்தியில் விவரித்து உள்ள இரண்டு உண்மைச் சம்பவங்களைப் படித்துப் பாருங்கள். அதன் பிறகு மரங்கள் நாம் பேசுவதைக் கேட்கும்; புரிந்து கொள்ளும் என்பதை நம்புவீர்கள்.

**படித்து வியந்தது :**

முதலில் இதை நம்பவில்லை... என் தோழி ஒருவரின் வாழ்வில் நடந்த உண்மைக் கதை இது... இந்தப் பெண்...கணவனோடு சென்னையில் வசிப்பவள். கல்யாணமாகி பத்து வருடங்களுக்கு மேல் குழந்தை இல்லாதவள். வழக்கம் போல கணவன் வீட்டின் ஏச்சும் பேச்சும் குறிப்பாக மாமியாரின் குத்தலும்... ஒருமுறை இந்தப் பெண் தனது கணவனின் சொந்த ஊருக்கு கணவனோடு போய் இருக்கிறாள்.



மதுரை அருகே ஒரு கிராமம். வீட்டுக்குப் பின்னால் ஒரு சில மாமரங்கள். அதில் ஒரு மரம் பல வருஷ காலமாக காய்க்கவில்லை. ஒரு நாள் மாலை...மாமியார் தன் மகனிடம் இவள் கணவனிடம் சொல்லி இருக்கிறாள். எப்பா..அடுத்த மாசம் இந்த மரத்தை வெட்டச் சொல்லி இருக்கேம்பா... ஏம்மா..



பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்

- திருவள்ளுவம்

## நல்வாழ்த்துகளுடன்...

## DEEPA ERECTORS PRIVATE LIMITED

No. 16/5, 1st Main Road, Ramakrishna Nagar,
Ernavoor, Chennai - 600057
mail to : depl@depltd.in

## PHOENIX OILFIELD SERVICES & CONTRACTING LLC

P.O. BOX: 1151, WADI KABIR P.C. 117,
Sultanate of Oman.

*Specialists in :*

**Construction of Storage Tanks, Pressure Vessels, Pipelines and Blasting & Painting in India & Overseas**







R. Paramasivam B.E.,
***Managing Director***
Ph.: 9884660379

Pa. Mathivanan B.E.,
***Chief Executive Officer***
& A. Nivetha B.E., M.B.A.,
***Business Analyst***

Pa. Shankar B.E., M.S.,
(Sweden)
***Consultant***

இது கூட சேர்ந்த மரங்கள் எல்லாம் காய்ச்சுத் தள்ளுது. இது மட்டும் காய்க்கலை... அதனாலே ஆளை வரச் சொல்லி வெட்டிடலாம்னு இருக்கேன்...

கணவன் இதைக் கண்டு கொள்ளாமல் விட்டு விட்டாலும், இந்தப் பெண்ணுக்குப் பொறுக்கவில்லை. உடனேயே அந்த மாமரத்தை தேடிப் போய் இருக்கிறாள். கண்ணீரோடு அந்த மாமரத்தை கட்டிப் பிடித்திருக்கிறாள். கண்களில் நீர் வழிய, அந்தப் பெண் இப்படிச் சொல்லி இருக்கிறாள். அட மாமரமே....நான் தான் காய்க்காத மரம்... பிள்ளை பெறாத மலடி...என்னைத் தான் எல்லோரும் திட்டுகிறார்கள். நீயும் ஏன் என்னைப்போல் காய்க்காமல் இப்படி நிற்கிறாய்...? என்னையாவது திட்டுகிறார்கள்..உன்னை வெட்டப் போகிறார்கள். தயவு செய்து நீயாவது காய்த்து விடு.. நீயும் என்னைப் போல் மலட்டுப் பட்டம் வாங்காதே.. என்று கேவிக் கேவிக் அழுதிருக்கிறாள்...அப்புறம் இவள் கணவனோடு சென்னை புறப்பட்டு வந்து விட்டாள். ஆனால் ஒவ்வொரு நாளும் மனசுக்குள் அந்த மரத்தை வெட்டும் காட்சித் தெரிய...தனியாகப் போய் உட்கார்ந்து அழுது தீர்த்திருக்கிறாள்...ஆனால் இதற்குப் பிறகு நடந்ததுதான் ஆச்சரியம்.

அத்தனை வருட காலம் காய்க்காத அந்த மாமரம். அதற்குப் பின் பூத்துக் குலுங்கி காய்த்து இப்போது மற்ற மாமரங்களைப் போல செழிப்பாக நிற்கிறதாம்...முதலில் நான் இதை நம்பாவிட்டாலும், விஞ்ஞானப்பூர்வமாக சில விஷயங்கள் விளங்கிய பிறகு இப்போது அதை முழுமையாக நம்புகிறேன். ஆம் இயற்கையோடு நாம் பேசலாம்.. மனிதர்களைவிட மரங்கள் நம்மை புரிந்து கொள்ளும்...

நம்மாழ்வார் வாழ்விலும் இதைப் போல ஒரு விஷயம் நடந்திருக்கிறது... நம்மாழ்வார் விழுப்புரத்தில் உள்ள சிறு கிராமத்தில் ஒரு விவசாயிடம் பேசிக் கொண்டிருக்கிறார். அந்த விவசாயி ஐயா இந்த பலா மரம் ஏறத்தாழ இருபது ஆண்டுகளாக இருக்கு.. ஆனால் இது நாள் வரை ஒரு பழம் கூட தரல... இந்த மரத்தின் நிழலால், பயிர்களும் வளர்வதில்லை.. அதான் வெட்டிடலாம்னு இருக்கேன் என்கிறார். பறவையெல்லாம் கூடு கட்டி இருக்கே...? என்று உடைந்த குரலில் கேட்கிறார் நம்மாழ்வார்.

இல்லங்கய்யா.. நமக்கு எந்தப் பயனும் இந்த மரத்தால இல்லை... இதைக் கேட்டவுடன் ஓடிச் சென்று நம்மாழ்வார் மரத்தைக் கட்டிப்பிடித்துக் கொள்கிறார். ‘ஓ’ வென்று அழுகிறார். பின்பு மரத்திடம் உன்னை பிரயோஜனம் இல்லாதவன்னு சொல்றானே அவனுக்கு நீ ஏன் பழம் தர மாட்டேங்கிற..? என்று மரத்துடன் உணர்வுப்பூர்வமான ஒரு நீண்ட உரையாடல் நடத்துகிறார். இதைப் பார்த்த விவசாயின் மனம் மாறுகிறது. மரத்தை வெட்ட வேண்டாம் என்று முடிவு செய்கிறார்.

ஆனால், இத்துடன் இது முடியவில்லை...ஓராண்டுக்குப் பிறகு அந்த விவசாயி ஒரு பெரிய பலாப்பழத்துடன் திருச்சி மாவட்ட திருவானைக்காவலில் இருந்த நம்மாழ்வாரை சந்திக்க வருகிறார். அய்யா... அந்த மரத்துல காய்ச்ச பழம்யா... என்று உச்சகட்ட சந்தோஷத்தில் அழுது கொண்டே பழத்தை கொடுக்கிறார். (இது விகடனில் வெளி வந்தது) ஆம். இயற்கையோடு நாம் பேசலாம். மனிதர்களைவிட மரங்கள் நம்மை புரிந்து கொள்ளும்.

# வரும் நாளெல்லாம் நமதே....



பிறப்பதற்குப் பெண் வேண்டும் - ஆனால்
பெண் குழந்தை பிறந்து விட்டால்
பெருந்துயர் பேறாக வந்துவிடும்

பிறப்பில் துவங்கும் பாகுபாடு....
உணவில், உடையில், உணர்வில், கல்வியில்
மருத்துவத்தில் என அனைத்திலும் தொடரும்.

கவலை கொள்ளாதே பெண்ணே....
நம் வாழ்க்கை நம்கையில்.

நீ...
ஆடிப்பாடி மகிழ்வைக் கொண்டாடு,
உண்டு களித்து உறங்கிடு. நல்ல நட்புடன்
உற்சாகமாய் உரையாடு.

புன்னகையை உதட்டிலும்,
உறுதியை உள்ளத்திலும்
உட்கார வை.

அமைதியும் அன்பும் பூண்டிரு.
அநீதி காணின் அம்பாய்ப் பாய்ந்திடு
அறம் பிழைத்தோர்க்கு அந்நியமாய் இரு.

நல்லவர்களிடம் நாணலாய் வளை...
அன்பிற்குரியவர்களிடம் மோனம் கொள்.
ஆள நினைப்பவர்களிடம் ஆத்திரம் பழகு.

எதற்கும் உடைந்திடாதே
உள்ளம் திறந்து உண்மை பேசு...
நிச்சயிப்பதும் நிராகரிப்பதும் நீயாக இரு.

மடை திறந்த வெள்ளமாய்ப் பிரவாக மெடு.
உற்சாகமாய் உரக்கக் குரல் கொடு.
வரும் நாளெல்லாம் நமதே என்று.



**- மதிப்புறு முனைவர்**
**கவி.கொ. கணேசன் M.Sc., M.A.,**
**கோவை**
**செல் : 9486192170**

# புதிய கல்விக்காவலர்கள்

## கல்விக்காவலர்-40



திரு S. மாணிக்கம் செட்டியார் - திருமதி சுசீலா ஆச்சி,
தஞ்சாவூர் .

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

பெற்றோர்: தெய்வத்திரு A. சேதுராமன் செட்டியார் – நலமுடன் திருமதி சரோஜா ஆச்சி.

மகன் – மருமகள் :

திரு. M. அண்ணாமலை – திருமதி. பவித்ரா

பேத்திகள் மஹிரப்பிரியாள் & மிதுரப்பிரியாள்

மகள்–மருமகன் :

திருமதி S. அன்பு பிரியா – திரு S. சரவணன்.

பேத்தி யாஷினி.

## கல்விக்காவலர்-41



கழுகக்கூருடையார்
**திரு. தேனப்பன் செட்டியார் -**
**திருமதி சந்திரா ஆச்சி**
கோவை.

### கல்விகாவலர் குடும்பத்தினர்

**பெற்றோர் :** கிருங்காக்கோட்டை கழுகக்கூருடையார் தே. சொக்கன் செட்டியார்-மீனாட்சி ஆச்சி

**தேனப்பன் செட்டியார் சகோதரர்கள் / சகோதரி :**

பழனியப்பன் செட்டியார், சுப்பையா செட்டியார், ஞானம் & சகோதரி அழகு மீனாள் சிவலிங்கம். கோவை தேனப்பன்

**சந்திரா ஆச்சி சகோதரர்கள், சகோதரி :**

திரு. காசி அலங்காரம் செட்டியார், திரு. தர்மலிங்கம் செட்டியார், திரு. ராமசாமி செட்டியார், சகோதரி திருமதி சீதாலெட்சுமி ஆச்சி.

## கல்விக்காவலர்-42



அரும்பாக்கிளையார்
தெய்வத்திரு
**ம.பொ. மாணிக்கம் செட்டியார்**
தெய்வத்திருமதி
**ம.பொ.மா. வேலுமயிலி ஆச்சி**
சிறுகுடி

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**மகன் - மருமகள் :**

திரு. M. சாமிநாதன் - S. பேபிராணி,

திரு. M. கனகராஜ் – K. இளவரசி

**மகள் - மருமகன் :**

அமுதா – சுப்பையா

## கல்விக்காவலர் 43



உளுந்தூருடையார்
தெய்வத்திருவாளர்
**அரு. கிருஷ்ணன் செட்டியார்**
நலமுடன் திருமதி சாவித்திரி ஆச்சி
அ. காளாப்பூர்

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**மகன்கள் - மருமகள்கள்**

K. அண்ணாமலை – ராதா

K. மனோகரன் - ஜெயமீனா

Dr. K. சோமசுந்தரம் – கீதா

K. நாகராஜன் – சௌந்திரநாயகி

**மகள் - மருமகன்**

திருமதி விஜயலெட்சுமி – பாஸ்கரன்

# அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம், சென்னை

# 33-ஆம் ஆண்டு குடும்ப விழா

25-12-2022 ஞாயிற்றுக்கிழமை அன்று சென்னை T.நகரில் “பாலாஜி மஹாலில்” சென்னை அ.வ.ந. சங்கத்தின் 33-ம் ஆண்டு குடும்ப விழா சிறப்பாக நடைபெற்றது. காலை 8.01 மணிக்கு திருவிளக்குபூஜை 70 மகளிர்களால் விளக்கேற்றி மங்கைபாகர்-தேனம்மையைப் போற்றிப் பாடி பூஜையை நிறைவு செய்தனர்.

கோலப்போட்டியில் 32 ஜோடி பெண்கள் கலந்து கொண்டனர். பொதுக்குழுக் கூட்ட நிகழ்வின்போது செல்வி ஹரினி, அஸ்விகா இருவரும் பரதநாட்டியம் நிகழ்த்தினர்.

சென்னை அ.வ.ந. சங்கம் உருவாக காரணமாக இருந்த தலைவர் தெய்வத்திரு நா. ஜெயராமன் அவர்களின் திரு உருவப்படம் திறந்து வைக்கப்பட்டு மௌனஅஞ்சலி செலுத்தப்பட்டது. திருமதி M. யாமினி, M. பிரகாஷ் குமார் வரவேற்புரை நிகழ்த்தினர். அதன் பின்னர் சென்னை அ.வ.ந. சங்கத்தலைவர் திரு N. முருகானந்தம் (எ) வெற்றிவேல் முருகன் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. குடும்ப விழாவிற்கு பொதுநலச் சங்கச் செயலாளர், வெளியூர்களிலிருந்து வந்திருந்த அனைவரையும் வரவேற்று, குடும்ப விழாவை சிறப்பாக ஏற்பாடு செய்திருந்த இளைஞர் பேரவை நிர்வாகிகளையும் தலைவர் பாராட்டி வாழ்த்தினார். செயலாளர் திரு வே. இராமனாதன் ஆண்டறிக்கையை வாசித்தார். பொருளாளர் திரு A.S. முருகேசன் 33-ம் ஆண்டுக்கான வரவு செலவு அறிக்கையை தாக்கல் செய்தார். பொதுநலச் சங்க செயலாளர் திரு மு. சாமினாதன், துணைச் செயலர் திரு ம. இளங்கோ, ஆகியோர் குடும்ப விழாவைப் பற்றி வாழ்த்தினர். சேலம் குருஜி S. ராஜ்குமார் வாஸ்துபற்றி கூறி பெண்களின் கடமையை எடுத்துரைத்தார். திருச்சி S. சிவனேசன் அவர்கள் தொழில் வளர்ச்சி கழகம் பற்றியும் சமூக ஒற்றுமையுடன் ஒரு கோடி முதலீட்டில் சென்னையில் ஹெல்த் கேர் பார்மா என்ற நிறுவனம் தொடங்கப்பட்டு சிறப்பாக செயல்படுவதாகக் கூறினார். பொன்னமராவதி திரு நா.

பழனியப்பன் அவர்கள் நம் நகரத்தார்களுக்கான தனி வங்கி ஒன்றை ஆரம்பிக்க வேண்டும் என்று கோரிக்கை வைத்தார். உடனே சென்னை அ.வ.ந. சங்கத் தலைவர் திரு N. முருகானந்தம் (எ) வெற்றிவேல் முருகன் அவர்கள் AVN Bank ஆரம்பிக்கப்படுவதாகவும் அதற்காக ரூ. 5,00,000/- (ரூபாய் ஐந்து இலட்சம்) முதலீடு செய்கிறேன் என்றும் அறிவித்துள்ளார். நகரத்தார்கள் அனைவரும் இம் முயற்சிக்கு ஆதரவும், பாராட்டும் கரவொலி மூலமாக தெரிவித்தனர்.

அருவியூர் தந்தை திரு நல்ல சுப்பையா அவர்களின் நினைவாக சாதனையாளர்கள் 5 நபர்களுக்கு ரூ. 2,000/-மும் கேடயமும் வழங்கப்பட்டது.

மதிய உணவிற்குப் பின் சமூக வளர்ச்சிக்கு உதவுவது தொழில் வளர்ச்சியா? வேலை வாய்ப்பா? என்ற வாதங்கள் வைக்கப்பட்டு இரண்டுமே தேவை என சென்னை அ.வ.ந. சங்கத் தலைவர் தீர்ப்பு கூறினார். நீயா? நானா? நிகழ்ச்சியை துணைத் தலைவர் M.S. ராஜேஸ் தொகுத்து வழங்கினார். குழந்தைகளுக்கான ஓவியப் போட்டி, மாறுவேடப்போட்டி, ஆடல் பாடல் போன்ற போட்டிகளை பார்வையாளர்கள் கண்டு களித்தனர். சென்னை அ.வ.ந. சங்கச் செயலாளர் திரு வே. இராமனாதன் அவர்கள் தனது 61-வது ஆண்டு பிறந்தநாளை முன்னிட்டு இரத்தப் பரிசோதனை இயந்திரம் சகாய விலையில் வாங்குவதற்கு ஏற்பாடு செய்தார்.

புதிய திருமணத் தம்பதிகள் மூவர் அறிமுகப்படுத்தப்பட்டு பரிசு வழங்கப்பட்டது. இருபாலருக்கான இசைப் பந்து போட்டி நடத்தப்பட்டது. விழாவில் கலந்து கொண்ட அனைவருக்கும் பரிசு வழங்கப்பட்டு, சென்னை சங்க நிர்வாகிகள், இளைஞர் பேரவை நிர்வாகிகள் அனைவருக்கும் பொன்னாடை போர்த்தி கௌரவிக்கப்பட்டனர். செய்தித் தொடர்பாளர் திரு T. துரைராஜ் நன்றி உரை கூற தேசியகீதம் பாடி விழா இனிதுடன் நிறைவுற்றது.

**தகவல் : செய்தித் தொடர்பாளர்**
**திரு T. துரைராஜ், அ.வ.ந. சங்கம், சென்னை.**



# மூலிகை டீ வகைகளும் அதன் அற்புத நன்மைகளும்

பால் கலக்காத பானம் தயாரித்துக் குடிப்பதால் உடலுக்கு நன்மை ஏற்படுவதுடன் செலவையும் குறைக்கலாம். இயற்கையான முறையில் தயாரித்துக் குடிப்பதால் உடலுக்கு ஆரோக்கியம் விளைவதுடன் பக்க விளைவுகளை ஏற்படுத்தாது.

**1. செம்பருத்திப்பூ டீ**



ஒற்றை செம்பருத்திப் பூக்களின் இதழ்களை மட்டும் பிரித்தெடுத்து, நீரில் போட்டுக் கொதிக்க வைத்து, வடிகட்டி எலுமிச்சைப் பழச்சாறு, வெல்லம் கலந்து டீயாகச் சுவைக்கலாம்.

**2. கொத்தமல்லி டீ**

கொத்தமல்லித் தழையைச் சிறிதளவு நீரில் கொதிக்க வைத்து, வடிகட்டி, சுக்குத்தூள், வெல்லம் கலந்து பருகலாம்.

**3. புதினா இலை டீ**

புதினா இலைகளை நீரில் கொதிக்க வைத்து வடிகட்டி, எலுமிச்சைப் பழச்சாறு, வெல்லம் சேர்த்து குடிக்கலாம்.

**4. கொய்ய இலை டீ**

கொய்யா இலைகளை நீரில் கொதிக்கவைத்து வடிகட்டி எலுமிச்சைப் பழச்சாறு, வெல்லம் சேர்த்து அருந்தலாம்.

**5. துளசி இலை டீ**

சில துளசி இலைகளை நீரில் கொதிக்க வைத்து வெல்லம், ஏலக்காய் சேர்த்தால் துளசி இலை டீ ரெடி. இது உடலுக்கு ஆரோக்கியத்தை அளிக்கும்.

**6. ஆவாரம்பூ டீ**

காம்பு நீக்கிய ஆவாரம்பூக்களை தண்ணீரில் போட்டு



கொதிக்க வைத்து, வடிகட்டி எலுமிச்சை பழச்சாறு, வெல்லம் கலந்த இந்த டீ யை வாரம் ஒரு முறை பருகலாம். இது உடலின் வெப்பத்தைத் தணிக்கும். சர்க்கரை நோய் உள்ளவர்களுக்கு ஏற்ற பானம்.

**7. முருங்கைக் கீரை டீ**

முருங்கை இலை, எலுமிச்சை இலை இரண்டையும் சேர்த்து நீரில் கொதிக்க வைத்து வெல்லம் சேர்த்தால் மணமிக்க முருங்கைக் கீரை டீ தயார்.

மேலே குறிப்பிடப்பட்டுள்ள 'டீ' வகைகளை தயாரிக்க 'டீ' வாசம் வேண்டும் என்றால் சிறிதளவு 'டீ' தூளை சேர்த்துக் கொள்ளலாம். பனைவெல்லம்–நாட்டுச்சர்க்கரை சேர்ப்பது தான் நல்லது.

**- S. யுவராணி B.E., சிறுகுடி**

# தாயே! தமிழே!! வணக்கம்




எம்மொழிக்கும் மூத்தவளே!
எம்மொழியாய் வாய்த்தவளே!
செம்மொழியாய் மொழிகளுக்குள்
செம்மாந் திருப்பவளே!
என் அன்னைத் தமிழே உன்னை
வணங்குகின்றேன்.
என்னை இயக்கும் இனிய தமிழே!
நீ என்னை வளமாய் இயக்கு.



– மதிப்புறு முனைவர்
**ம.சி.கு.கு. கணேசன், கோவை.**

# சுண்டக்காய்



சுண்டக்காய் அளவில் சிறியதாக இருந்தாலும் அதன் பயன்கள் அளப்பறியது. சுண்டக்காய் எந்த இடத்திலும் வளரும் தன்மை கொண்டது. சுண்டக்காயில் மலை சுண்டக்காய், பால் சுண்டை என்ற இருவகைகள் உள்ளன.

செடியிலிருந்து கிடைக்கும் சுண்டக்காய் பச்சை நிறத்தில் இருக்கும். இதைக் கொண்டு குழம்பு, கூட்டு என்று வைத்து சாப்பிடலாம். இது தவிர சுண்டக்காயை இரண்டாகப் பிளந்து மோர் ஊற்றி வெயிலில் காயவைத்து எடுத்த சுண்டை வத்தல் சாப்பிட ஏற்றது. பெரும்பாலும் இவை கடைகளில் கிடைக்கும். இதை எண்ணெயில் பொறித்தோ அல்லது குழம்பாகவோ செய்து சாப்பிடலாம்.

**சுண்டக்காயை சாப்பிடுவதால் ஏற்படும் ஆரோக்கிய நன்மைகள்:**

இதைத் தொடர்ந்து சாப்பிடுவதால் இரத்தத்தில் உள்ள வெள்ளையணுக்கள் அதிகரிக்கும். இதன் காரணமாக உடலில் இரத்த சோகை ஏற்படாமல் பாதுகாக்க முடியும். இரத்த சோகையிலிருந்து விடுபடலாம்.

இரத்த குழாய்களில் படியும் கெட்ட கொழுப்புகளைக் கரைக்க இது உதவுகிறது. மேலும் உடலில் சேரும் நச்சுக்களை வெளியேற்ற உதவுகிறது. மேலும் இதைத் தொடர்ந்து சாப்பிட உடல் நடுக்கம், மயக்கம், சோர்வு மூச்சுக் கோளாறுகள் போன்றவை நீங்கும். குழந்தைகள் இதை சாப்பிடுவதால் உடல் மற்றும் எலும்பு வளர்ச்சி அதிகரிக்கும்.

சுண்டைக்காயில் வைட்டமின் பி மற்றும் சி சத்து உள்ளது. இரும்பு சத்தும் உள்ளது. சுண்டக்காயில் உள்ள கசப்பு தன்மை ரத்தத்தை சுத்தம் செய்வதோடு உடலில் நோய் எதிர்ப்பு சக்தியை அதிகப்படுத்தும். சர்க்கரை நோயாளிகளுக்கு ரத்தத்தில் சர்க்கரை அளவு குறைக்க உதவும். சுண்டைக்காய் கிடைக்காத காலங்களில்



சுண்டை வற்றலைப் பயன்படுத்தலாம். வாயுப் பிடிப்பு உள்ளவர்களுக்கு சுண்டக்காய் நல்ல மருந்து. பச்சை சுண்டைக் காயை அடிக்கடி எடுத்துக் கொள்வதன் மூலம் எலும்புகள் பலப்படும்.

ஆஸ்துமா, வறட்டு இருமல், மார்புச்சளி, காச நோய் தொந்தரவு இருப்பவர்கள், தினம் இருபது சுண்டை வற்றலை சிறிது நல்லெண்ணெயில் வறுத்து சாப்பிட்டால், நோய் கட்டுப்படும். சுண்டைக்காய் சிறுநீரை பெருக்கும் தன்மை கொண்டது. கல்லீரல், மண்ணீரல் நோய்களையும் நீக்க உதவுகின்றது. அதே போன்று சுண்டை வற்றலை நெய்யில் வறுத்துப் பொடியாக்கி சோற்றுடன் சேர்த்துப் பிசைந்து சாப்பிட்டு வந்தால் நீரிழிவு நோயினால் உண்டாகும் கை கால் நடுக்கம், மயக்கம், உடற்சோர்வு, வயிற்றுப் பொருமல் முதலியவை நீங்கும்.

மூலநோய் உள்ளவர்கள் ஒரு கைபிடி அளவு சுண்டைக் காயை நெய்யில் வதக்கி சாப்பிட்டால், மூலத்தில் உள்ள கடுப்பு நீங்கும், மூல நோயால் உண்டாகும் ரத்தக் கசிவும் நீங்கி விடும்.

சுண்டைக்காயை உணவில் சேர்த்து வந்தால் வயிற்றுக் கிருமி, மூலக்கிருமி போன்றவை அகலும். வயிற்றுப்புண் ஆறும். வயிற்றின் உட்புறச் சுவர்கள் பலமடையும். புளித்த ஏப்பம், மூட்டு வலி போன்றவைகளுக்கு சுண்டைக்காய் சிறந்த மருந்து. குழந்தைகளுக்கு ஏற்படும் ஊட்டச்சத்து பற்றாக்குறையைப் போக்க சுண்டைக்காய் உதவும். எனவே சுண்டைக்காயை உணவில் அடிக்கடி சேர்த்துக் கொள்வோம்.

**– திருமதி ரேவதி இளையராஜா M.Sc., B.Ed., கோவை.**
**செல் : 70100 34735.**

**அச்சிட்டோர் : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ்**
534 -ஏ, காமராஜர் சாலை, சிவகாசி - 626123.
போன்:04562-223315 இ.மெயில் suryaprint1998@gmail.com

உ



சிறுகுடி தெய்வத்திரு எம். சண்முகம் பி.இ.
அவர்களின் நல்லாசியுடனும்,
பொதுமக்களின் பேராதரவுடனும்
8 –ஆம் ஆண்டாக வெற்றிநடை போடும்

# அர்ச்சனா ஜெனரல்ஸ்
# காளான்
## விற்பனை நிலையம்



**எங்களிடம் தங்கள் விசேஷத்திற்குத் தேவையான**



- பனீர்
- பட்டர்
- கோவா
- சீஸ்
- பால், தயிர்
- பேபிகார்ன்
- ஸ்வீட் கார்ன்
- ரெடிமேட் பூரி
- ரெடிமேட் புரோட்டா
- ரெடிமேட் சப்பாத்தி
- தண்ணீர் பாட்டில்
- ஐஸ்கிரீம்
- காளான் ஊறுகாய்
- ஸ்ரீதேவி பிரியாணி பேஸ்ட்
- Frozen Items

**ஆர்டரின் பேரில் ஏற்பாடு செய்து தரப்படும்.**

S. **பழனியப்பன்** B.E., ✆ 90257 87637, 70107 91246



# அர்ச்சனா ஜெனரல்ஸ்
# காளான்
## நேரடி விற்பனை நிலையம்

**(மொத்தம் & சில்லரை விற்பனை)**

தலைமை தபால் நிலையம் எதிரில், ST கொரியர் அருகில்,
ஸ்கீம் ரோடு, திண்டுக்கல் – 624 001.

E-mail : archanaageneralsdgl@yahoo.in




# செய்யும் தொழில் வளர்ச்சியடைய தேவையான பண்புகள்

நீங்கள் செய்கிற தொழிலிற்குத் தேவையான திறமைகள் உங்களுக்கு இருக்கிறதா? என நீங்கள் உங்களையே சுய மதிப்பீடு செய்து கொள்ளுங்கள்.

உடன் பணிபுரிபவர்கள் மற்றும் உங்களுடைய மேலதிகாரிகளிடம் உங்கள் வேலைத் திறமை பற்றி கருத்துக்களை கேட்டுப் பெறுங்கள். அது உங்கள் தொழிலில் உங்களை மென்மேலும் உயர்வடையச் செய்யும்.

நீங்கள் செய்யும் தொழிலில் உங்களுடைய இலக்கு எது என்பதில் தீர்மானமாக இருங்கள். உங்களுடைய இலக்கை அடைய நீங்கள் என்னவெல்லாம் செய்ய வேண்டும்; எதை எந்தெந்த நேரத்தில் செய்ய வேண்டும் என்கிற கால அளவை நிர்ணயம் செய்யுங்கள்.

உங்களுடைய தொழிலைப் பற்றிய புதுப்புது விசயங்களைத் தெரிந்து வைத்திருத்தல் அவசியம். புதிய மொழிகளைக் கற்றுக் கொள்ளுங்கள். அப்போது அது உங்களுடைய தன்னம்பிக்கையை அதிகரிக்கும். தொழில் அபிவிருத்தி அடையும்.

உங்களுடைய தொழில்துறை உறவுகளை மேம்படுத்திக் கொள்ளுங்கள். மேற்கூறிய பண்புகளை நீங்கள் வளர்த்துக் கொண்டீர் களானால் நீங்கள் செய்யும் தொழில் மென்மேலும் வளர்ச்சியடையும்.

**– A. சபரி அலங்கார், B.E., சிறுகுடி**

## பயனுள்ள மருத்துவக் குறிப்புகள்

1. குங்குமம் இட்டுக் கொள்ளும் போது தரமானதாக இல்லாவிட்டால் சில நேரம் நெற்றியில் புண்ணாகி விடும். அப்பொழுது கடுக்காயை இழைத்து புண்ணான இடத்தில் தடவலாம்.
2. தேள் கொட்டிய இடத்தில் துளசி இலைகளைத் தேய்த்தால் விஷம் இறங்கி வலி குறையும்.
3. தொண்டைக் கமறல், இருமல் இவற்றால் அவதியுற்றால் பசும்பாலில் மஞ்சள் தூளை சேர்த்து காய்ச்சி பனங்கற்கண்டு சேர்த்து அருந்தினால் குணமாகிவிடும்

**- M. வினோத்குமார், கோவை. செல் : 9843084455**



# ராஜா கேல்கர் மியூசியம்



மகாராஷ்டிரா மாநிலம், புனேயில் அமைந்துள்ளது ராஜா தினகர் கேல்கர் அருங்காட்சியம். சுற்றுலா பயணியரை வெகுவாகக் கவரும் வகையில் அமைந்துள்ளது. இது உருவான கதை மிகவும் சுவாரசியமானது. அது பற்றி பார்ப்போம்.

செல்வந்தரும் எழுத்தாளருமான கேல்கர், குடும்பத்துடன் புனே நகரில் வசித்து வந்தார். திடீரென உடல் நலம் குன்றி அவரது மகன் இறந்தான். பெரும் சோகத்தில் மூழ்கிய கேல்கர், மீள வழி தெரியாமல் தவித்தார். இந்த நிலையில் கலைப் பொருட்களை சேகரிக்க ஆரம்பித்தார். அது சோகத்தைக் கரைத்தது.

வரலாற்று பழமையான பொருட்களை மட்டும் இன்றி, புழக்கத்தில் இருந்த பொருட்களையும் தேடி சேகரிக்கத் தொடங்கினார். எவ்வளவு விலை கொடுத்தும் வாங்கத் தயங்கவில்லை. சேகரிப்புத் துவங்கிய 1920 முதல் 40 ஆண்டுகளில் 20 ஆயிரம் கலைப்பொருட்கள் சேர்ந்தன. இந்த முயற்சிக்கு அவரது மனைவியும் பெரும் ஒத்துழைப்பு கொடுத்து வந்தார்.

முதுமையடைந்த கேல்கர், சேகரித்த கலைப் பொருட்களை மகாராஷ்டிரா மாநில அரசிடம் ஒப்படைத்தார். புனே நகரில் அழகிய மூன்று மாடி கட்டடத்தில் அருங்காட்சியகம் அமைத்து, அந்த கலைப் பொருட்களை காட்சிப்படுத்தியுள்ளது அரசு.

மொகலாயர் கட்டட கலைப் பாணியில் அரண்மனை போல் விளங்குகிறது இந்த அருங்காட்சியகம். இதற்கு ராஜா தினகர் கேல்கர் என பெயர் சூட்டப்பட்டுள்ளது. இதன் முதல் தளத்தில், 17 மற்றும் 18-ம் நூற்றாண்டைச் சேர்ந்த, கலைப் பொருட்கள் ஒன்பது கேலரிகளில் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. இதில் ஆடை, ஆபரணம், இசைக் கருவி, எண்ணெய் விளக்கு, நடன, நாட்டியச் சிற்பம் என பல வகை பொருட்கள் உள்ளன.

இந்த மியூசியத்தின் வளர்ச்சிக்கு திரு. எஸ். சொக்கலிங்கம் ஐ.ஏ.எஸ். அவர்கள் உதவியாக இருந்து அரசாங்கத்திடம் இருந்து நிதி உதவி பெற்றுத் தந்துள்ளார். இவர் நமது சமுதாயத்தைச் சேர்ந்தவர் என்பது பெருமைக்குரியதாகும்.

**- எம். தீப அலங்கார், M.Sc., திண்டுக்கல்.**

# சஷ்டியப்த பூர்த்தி மணிவிழா

## திரு.வே.இராமநாதன் செட்டியார் - சந்திரகலா ஆச்சி

20.12.2022

திருக்கடையூர் அருள்மிகு

அபிராமி அம்மன் சமேத அமிர்தகடேஸ்வரர் சந்நிதி















அருவியூர் வடக்குவளவு நகரத்தார்

# கல்வி வளர்ச்சிக் கழகம்

# 41 ஆம் ஆண்டு விழா நிகழ்வுகள்
























41 ஆம்

அருவியூர் வடக்குவளவு நகரத்தார்

# கல்வி வளர்ச்சிக் கழகம்

# ஆண்டு விழா நிகழ்வுகள்























# கண்ணீர் அஞ்சலி



**தெய்வத்திரு சொ. நடராஜன் B.Com., A.C.A.,**
**மதுரை**

நாள்: **10-01-2023**

கல்வி வளர்ச்சிக் கழகத்தின் முதல் தலைவரும் நகரத்தார் குரலின் பதிப்பாசிரியரும் (2002) ஆகிய திரு. சொ. நடராஜன் அவர்கள் இன்று 10.01.2023 செவ்வாய்க்கிழமை மாலை 5 மணி அளவில் மதுரை K.K. நகரில் அன்னாரது இல்லத்தில் இறைவனடி சேர்ந்துள்ளார்கள்.

அன்னாரின் மறைவு கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு பேரிழப்பாகும்.
அன்னாரின் மறைவுக்கு கல்வி வளர்ச்சி கழகத்தின் சார்பில் ஆழ்ந்த வருத்தத்தை தெரிவித்துக் கொள்கிறோம்.
அன்னாரின் ஆத்மா சாந்தியடைய இறைவனை வேண்டுகிறோம்.
அன்னாரை இழந்து வாடும் குடும்பத்தினருக்கும் உறவினருக்கும் ஆறுதலை தெரிவித்துக் கொள்கிறோம். வருத்தத்துடன் கண்ணீர் அஞ்சலி.

**கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகிகள்**
**பிரான்மலை.**

# ஒன்பதாம் ஆண்டு

# நினைவு அஞ்சலி



தெய்வத்திரு **A.P. சரவண ஐயப்பன்**

நினைவுகளுடன்

**குடும்பத்தார்கள்**

# ராகி கூழின் மகத்துவம்




ஒரு கை ராகி மாவை அள்ளிப்போட்டு
கூழ் காய்ச்சும் அப்பாயியின் பக்குவம்
இன்றுவரை இருக்கிறது மனதோடு
நிறமும் ருசியும் மாறாமல்

வெறும் மேலுடன் அலைந்து திரிந்து
பசிக்குப் புசிக்கும் அய்யாவு பிள்ளைக்கு
வெறுந்திண்ணை தராத குளிர்ச்சியை
தந்து நிறைக்கும் கூழ்!

முருங்கைக்கீரைப் பொரியல்,
மொச்சைக் கொட்டைக் குழம்பு,
ஊறுகாய், வடகம், வத்தல்,
மோர் மிளகாய், கெட்டித் தயிரு.

விதவிதமான தொடு கறிகள்
எத்தனையோ இருந்தாலும்
மண் நிறத்தில் ஊறும் கூழுக்கு மட்டும்
பசியைக் கிளப்பும் தந்திரம் தெரியும்!

உடலுக்கு உகந்ததெனக்
கூழின் மகத்துவம் புரிந்தவர்கள் மட்டும்,
அவ்வப்போது சாலையோரத்தில்
விற்கும் கூழை அருந்திச் செல்கிறார்கள்!

கால மாற்றத்தால் வீட்டினின்றும்
தள்ளுவண்டியில் வீதிக்கு வந்தவைகளில்
கூழும் ஒன்றாகிப் போனது
குளுமை மாறாமல்!!

– **திரு V. கணேசன், ஆசிரியர் குழு, V. புதூர்**

# 2022-23-ம் ஆண்டில் வழங்கப்பட்ட உதவித் தொகை

நடைபெறும் 2022-23-ம் கல்வி ஆண்டில் நமது மாணவ மாணவியர்களுக்கு அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம் உதவித் தொகை வழங்கிய விபரம்.

| வ. எண். | வகுப்பு | தொகை வீதம் | மாணவர் எண்ணிக்கை | மொத்த தொகை |
|---|---|---|---|---|
| 1. | 6,7,8 | 500 X | 18 | 9,000 |
| 2. | 9 | 1000 X | 12 | 12,000 |
| 3. | 10 | 1000 X | 15 | 15,000 |
| 4. | 11 | 1000 X | 13 | 13,000 |
| 5. | 12 | 1000 X | 15 | 15,000 |
| 6. | பட்டப்படிப்பு | 5000 X | 70 | 3,50,000 |
| 7. | I.T.I. | 3000 X | 2 | 6,000 |
| 8. | B.E. B.Tech. C.A. | 6000 X | 11 | 66,000 |
| 9. | B.E. B.Tech.C.A. | 10000 X | 6 | 60,000 |

மேற்கண்ட பள்ளிப்படிப்பு படிக்கும் மாணவர்களைத் தவிர 89 கல்லூரி மாணவர்களுக்கு இலவச உதவித்தொகை மற்றும் கடன் தொகை மொத்தம் ரூ. 4,82,000/- கல்விக் காவலர்கள், மாபெருங் கொடை வள்ளல்கள், பெருங்கொடை வள்ளல்கள், கொடை வள்ளல்கள், வள்ளல்கள், பெரும்புரவலர்கள், புரவலர்கள், உதவியால் வழங்கப்பட்டுள்ளது. நிதி உதவி செய்துவரும் அனைவரையும் அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம் மனமாரப் பாராட்டி வாழ்த்துகிறது.

**- செயலாளர், அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்**

# திருமண நிகழ்வுகள்



மணமகன் : செல்வன் **அ.ம. அருணாச்சலம்** B.E.

மணமகள் : செல்வி **சி. செண்பகவள்ளி (எ) அருந்ததி** B.E.

மணமகனின் பெற்றோர் : கழனிவாசலூருடையார்

**திரு AR. மனோகரன் செட்டியார் – தேன்மொழி ஆச்சி,**

பொன்னமராவதி

மணமகளின் பெற்றோர் : மேலூருடையார்

**தெய்வத்திரு SP. சிதம்பரம் செட்டியார் –**

**நலமுடன் திருமதி விசாலாட்சி ஆச்சி,** பொன்னமராவதி

நிகழ்விடம் : அ.வ.ந. மங்கைநாயகர் மன்றம், பொன்னமராவதி.

மணநாள் : 28-10-2022 வெள்ளிக்கிழமை

**தகவல் : திரு கா. முத்துக்கருப்பன், பொன்னமராவதி.**



**60 ஆம் ஆண்டு நிறைவு**

**மணிவிழா**

3-11-2022 அன்று பொன்னமராவதி உயர்திரு **இரா.இராஜசேகரன் செட்டியார்** - திருமதி **அன்புச்செல்வி ஆச்சி** தம்பதியினரின் 60 ம் ஆண்டு நிறைவு விழா பொன்னமராவதி **RRS** இல்லத்தில் கணபதி பூஜையுடன் தொடங்கி தொடர்ந்து விழாக்கள் பொன்னமராவதி அ.வ.ந.மங்கைநாயகர் மன்றத்தில் சீரும் சிறப்புமாக நடைபெற்றது.

- தகவல் இரா. இராஜேஷ்குமார் பொன்னமராவதி

சிறுவர் பகுதி



# மழை எப்படி உருவாகிறது?

கடல் மற்றும் பிற நீர்நிலைகளில் இருக்கும் நீரானது, சூரியனின் வெப்பத்தால், ஆவியாதல் மூலம் நீராவியாகி வானை நோக்கி மேலே செல்கிறது. அப்படி மேலே செல்லச் செல்ல வெப்பநிலை குறைவதனால் இந்த நீராவிகள் சிறு நீர்மத் துளிகளாகிறது. மேகங்கள் மேலும் குளிர்வடையும் போது, இந்த சிறு நீர்மத் துளிகள், பெரிய நீர்மத் துளிகளாக மாறுகிறது. இதனால் இந்த நீர்மத் துளிகளின் எடை அதிகரிக்கும். புவிஈர்ப்பு சக்தியால் இந்த நீர்மத் துளிகள் பூமியால் ஈர்க்கப்பட்டு மழையாகப் பொழிகிறது.

“ஆழிமலைக் கண்ணா இன்று நீ கை கரவேல்” என்பது ஆண்டாள் அருளிய திருப்பாவையின் நான்காவது பாசுரம். மழை எப்படிப் பொழிகிறது என்பதை எடுத்துரைக்கும் 1200 ஆண்டுகளுக்கு முந்தைய பாடல் இது.

இன்றைய வானிலை ஆராய்ச்சிகளை எல்லாம் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நம் முன்னோர்கள் மேற் கொண்டு இருக்கிறார்கள். பல கண்டுபிடிப்புகள் உண்மை என்றே இன்றைய வானிலை ஆராச்சியாளர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. மழை, புயல், வெள்ளம், சூறாவளி காற்று, வெள்ளத்தால் சேதம், வறட்சி போன்ற விசயங்களை ஓராண்டிற்கு முன்பே கணித்து பஞ்சாங்கத்தின் மூலம் வெளியிடப்படுகிறது. அவைகள் சரியாகவே நடந்து வருகின்றன. நமது முன்னோர்களின் விஞ்ஞான அறிவை வியந்து பாராட்டி வணங்குவோம். **– I. சாமி ஆஸ், கோவை. 9787115503**

## பூஜையில் பாட வேண்டிய பாடல்



புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்அடி என்மனத்தே..
வழுவாதிருக்க வரந்தர வேண்டும் இவ்வையகத்தே..
தொழுவார்க்கு இரங்கி இருந்தருள் செய் பாதிரிப்புலியூர்ச்..
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே.

– திருநாவுக்கரசு சுவாமிகள்

# கல்விக் காவலர்கள்

1. **மே 2004 : முதல் கல்விக் காவலர், ஆமலூருடையார், தெய்வத்திரு. வெ.ராம. சுப்பிரமணியன் செட்டியார் – அன்னபூரணி ஆச்சி அவர்கள், அம்மன் குறிச்சி, சென்னை.**
2. ஜுலை 2004 : மேலூருடையார், **திரு. தே.மா. பழனிச்சாமி செட்டியார் – திருமதி. சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
3. செப்டம்பர் 2006 : கழனிவாசலூருடையார் **திரு.நா. சுப்பிரமணியன்** BSc., CAIIB **திருமதி. தமிழ்ச்செல்வி** B.Lit., அவர்கள், கல்லம்பட்டி, சென்னை.
4. **மார்ச் 2007 : நாவலூருடையார், திரு. ச. கனகசபை B.E., மனோரஞ்சிதம்** அவர்கள், உலகம்பட்டி, திருச்சி.
5. ஜுலை 2007 : கழுகக்கூருடையார், **தெய்வத்திரு. இராம. வேலாயுதம் செட்டியார் – பார்வதி ஆச்சி** அவர்கள், படமிஞ்சி, சென்னை.
6. நவம்பர் 2007 : கழனிவாசலூருடையார், **தெய்வத்திரு. மு.சி.கி. நாராயணன் செட்டியார் – இராஜமாணிக்கம் ஆச்சி** அவர்கள்,கல்லம்பட்டி.
7. மே 2010 : சிக்கலூருடையார், **தெய்வத்திரு. நல்லாசிரியர் மெ. இளங்கோ – சாவித்திரி** அவர்கள். வா.புதூர்.
8. ஜுலை 2011 : அரும்பாக்கிளையார். திரு. **M.M. தியாகராஜன் B.Sc., தெய்வத் திருமதி. ஜோதிமணி** அவர்கள் புழுதிப்பட்டி. மதுரை.
9. ஜனவரி 2012 : பொன்னமராவதி பூண்டிலூருடையார். தெய்வத்திரு. மா. தங்கராஜன் – அழகுமீனாள் அவர்கள், புழுதிபட்டி பெங்களூரு.
10. மார்ச் 2012 : கழுகக்கூருடையார். **தெய்வத்திரு. மு.ஆ. இராமசாமி செட்டியார். தெய்வத்திருமதி. இராஜாமணி ஆச்சி,** சொக்கம்பட்டி.
11. மே 2012 : நாவலூருடையார், **திரு. ச. சொக்கலிங்கம் செட்டியார் – தெய்வத்திருமதி. தனபாக்கியம் ஆச்சி** அவர்கள் உலகம்பட்டி.
12. **ஜுலை 2012 : கழனிவாசலூருடையார். திரு. P.L. இராமஜெயம், பத்மாவதி அவர்கள், பொன்னமராவதி.**
13. செப்படம்பர் 2012 : கழுகக்கூருடையார். **தெய்வத்திரு.** M.S.M. **மாணிக்கம் செட்டியார் – சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
14. **நவம்பர் 2012 : பணப்பாக்குழூருடையார். தெய்வத்திரு. கு. சொக்கலிங்கம் செட்டியார் – சொ. தேனம்மாள் ஆச்சி, செம்பூதி.**
15. மார்ச் 2013 – அரும்பாக்கிளையார், **தெய்வத்திரு. இராம. கதிரேசன் செட்டியார். திருமதி.முத்துலெட்சுமி ஆச்சி,** புழுதிப்பட்டி.
16. **மே 2013 : மேலூருடையார். தெய்வத்திரு. தே.மா. நாராயணன் செட்டியார் – சண்முகவள்ளி ஆச்சி,** பொன்னமராவதி.
17. ஜுலை 2013 : பூதமங்கலமூருடையார். **திரு. ச. இராமலிங்கம் – இராஜமாணிக்கம்,** அயனாவரம். சென்னை.
18. நவம்பர் 2013 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. துரைராசு செட்டியார் – மீனாட்சி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை

19. ஜனவரி 2014 : நாவலூருடையார். **தெய்வத்திரு. அரு. வேலாயுதம் செட்டியார் – சம்பூர்ணம் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

20. **மார்ச் 2014 : பூதமங்கலமுருடையார். திரு. R. பரமசிவம் B.E., தெய்வத்திருமதி. சிவகாம சுந்தரி, பொன்னமராவதி, சென்னை.**

21. **ஜனவரி 2015 : பூதமங்கலமுருடையார். திரு. அ.சொ. சண்முகம் செட்டியார் – ஜெயபாரதி ஆச்சி, அம்மன்குறிச்சி, திருச்சி.**

22. **மார்ச் 2015 : அரும்பாக்கிளையார். திரு. A.P. ஜெயபால் – புவனேஸ்வரி, பொன்னமராவதி, ஈராடு.**

23. ஏப்ரல் 2015 : கழுகக்கூருடையார், **தெய்வத்திரு. ம.வெ. நாராயணன் செட்டியார் – மீனாட்சி ஆச்சி** உலகம்பட்டி.

24. ஏப்ரல் 2015 : நாவலூருடையார். **திரு. சித. நடராஜன் செட்டியார், தெய்வத்திருமதி. இராஜம்மாள் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

25. மே 2015 : நாவலூருடையார். **திரு. அரு.வே. மாணிக்கவேலு – சரஸ்வதி,** பொன்னமராவதி.

26. **ஜூலை 2015 : ஆமலூருடையார். திரு. வெ.இராம.சுப. செல்வம்** B.Sc., ACA., **– ஆனந்தம் ஆச்சி, அம்மன்குறிச்சி, சென்னை.**

27. ஜனவரி 2016 : அரும்பாக்கிளையார், தெய்வத்திரு. **மங்கைபாகன் செட்டியார் – சிகப்பி ஆச்சி,** புழுதிப்பட்டி.

28. மே 2016 : கழுகக்கூருடையார், **திரு. சி.சொ.மு. இராமையா செட்டியார் – தெய்வத்திருமதி. ஜெகநாதம் ஆச்சி,** கொன்னைப்பட்டி, தேனி.

29. செப்டம்பர் 2017 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. நேசமணி செட்டியார் – அருள்நிதி புவனேஸ்வரி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை.

30. ஜனவரி 2018 : பணப்பாக்கூருடையார் **தெய்வத்திரு. சுப. மணிவாசகம் செட்டியார் – தேன்மொழி ஆச்சி,** காரைக்குடி.

31. செப்டம்பர் 2018 : கழுகக்கூருடையார் **திரு. சோம. கதிரேசன் செட்டியார் – தவமணி ஆச்சி,** பொன்னமராவதி, தொட்டாம்பாளையம்.

32. ஜூலை 2019 : அரும்பாக்கிளையார் **திரு. பொன். சிவஞானம் செட்டியார் – ராஜகுமாரி ஆச்சி,** சிறுகுடி.

33. **ஆகஸ்ட் 2019 : நாவலூருடையார் தெய்வத்திரு. சித. மாணிக்கம் செட்டியார் – அழகுமீனாள் ஆச்சி, பொய்யாமணிப்பட்டி.**

34. **ஆகஸ்ட் 2019 : வரதலூருடையார் ந. செல்வம் செட்டியார் – சிவயோகம் ஆச்சி, புழுதிபட்டி / கோவை.**

35. **ஜனவரி 2020 : பழனி ஆதிசைவ அன்னதான மடம் – அருள்மிகு பழனி ஆண்டவர் அறக்கட்டளை, பழனி.**

36. மார்ச் 2020 : மேலூருடையார் **தெய்வத்திரு. செ.பெ.அ. அலங்காரம் செட்டியார் – திருமதி. செம்பாயி ஆச்சி,** சிறுகுடி.

37. **அக்டோபர் 2020 :** பொன்னமராவதி **பூண்டிலூருடையார்**
**திரு. சி. வெள்ளைச்சாமி செட்டியார் - திருமதி. சாந்தி ஆச்சி, சிறுகுடி / கோவை.**

38. **டிசம்பர் 2020 :** கழனிவாசலூருடையார் கிருங்காக்கோட்டை
திரு. V. லட்சுமணன் செட்டியார் - பாக்கியலட்சுமி ஆச்சி தம்பதியர்

39. **மே 2021 :** மேலூருடையார் **செம்பூதி/பொன்னமராவதி** தெய்வத்திருவாளர்கள்
தே.மா. சுப்பையா செட்டியார்- சுப. பூங்கோதை ஆச்சி

40. **டிசம்பர் 2021 : பாளையூர் அம்பலம்கொண்டார் ஒடுவன்பட்டி / தஞ்சை திரு S. மாணிக்கம் செட்டியார் – திருமதி சுசீலா ஆச்சி**

41. **பிப்ரவரி 2022 : கழுகக்கூருடையார் கிருங்காக்கோட்டை / கோவை தெய்வத்திருவாளர்கள் தேனப்பன் செட்டியார் – சந்திரா ஆச்சி**

42. **ஆகஸ்ட் 2022 : அரும்பாக்கிளையார் – சிறுகுடி தெய்வத்திரு. ம.பொ. மாணிக்கம் செட்டியார் – தெய்வத்திருமதி. ம.பொ.மா. வேலுமயிலி ஆச்சி.**

43. ஜனவரி 2023 : உளுந்தூருடையார் **தெய்வத்திருவாளர் அரு. கிருஷ்ணன் செட்டியார் – நலமுடன் திருமதி சாவித்திரி ஆச்சி,** அ. காளாப்பூர்

## சுவாமி விவேகானந்தரின் சிந்தனைகள்



செயல் நன்று. சிந்தித்து செயலாற்றுவதே நன்று. உனது மனதை உயர்ந்த லட்சியங்களாலும், சிந்தனைகளாலும் நிரப்பு. அவற்றை ஒவ்வொரு நாளின் பகலிலும் இரவிலும் உன் முன் நிறுத்து. அதிலிருந்து நல் செயல்கள் விளையும்.

நீ எதை நினைக்கிறாயோ அதுவாக ஆகிறாய். உன்னை வலிமை உடையவன் என்று நினைத்தால் வலிமை படைத்தவன் ஆவாய்!! சோம்பேறித்தனத்தை எந்த வழியிலும் துரத்தியாக வேண்டும். சுறுசுறுப்பு என்பதற்கு எதிர்ப்பது என்பது பொருள். பகை, பொறாமை ஆகியவற்றை நீ வெளியிட்டால், அவை வட்டியும் முதலுமாக மீண்டும் உன்னிடமே திரும்பி வந்து சேர்ந்துவிடும். பிறரது பாராட்டுக்கும், பழிக்கும் செவிசாய்த்தால் மகத்தான காரியம் எதையும் செய்ய முடியாது.

தோல்விகளைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். லட்சியத்தி லிருந்து 1000 தடவை வழுக்கி விழுந்தாலும், லட்சியத்துக்கு உழைப்பதில் பிழைகள் நேர்ந்தாலும் திரும்பத் திரும்ப அந்த லட்சியத்தைப் பிடித்துக் கொள்ளுங்கள். லட்சியத்தை அடைய 1000 தடவை முயலுங்கள். அந்த 1000 தடவை தவறினாலும் இன்னுமொரு முறை முயலுங்கள். முயற்சியைக் கைவிடாதீர்கள்.

உண்மைக்காக எதையும் துறக்கலாம். ஆனால் எதற்காகவும் உண்மையைத் துறக்கக் கூடாது.

**– திருமதி ஆனந்த செல்வம், நங்கநல்லூர், சென்னை.**

# குலதெய்வ கோவில் வீட்டின் புண்ணியாவாசம்

சிறுகுடி சொக்கம்பட்டி மேலூருடையார் பங்காளிகளின் குலதெய்வமான அருள்மிகு பாப்பாத்தி அம்மன் கோவில் வீட்டின் புண்ணியவாச மங்கள நிறைவு விழா வருகிற சுபகிருது வருஷம் தைத் திங்கள் 12-ம் நாள் (26-01-2023) வியாழக்கிழமை அதிகாலை பிரம்ம முகூர்த்த வேளையில் கணபதி ஹோமம், லெட்சுமி பூஜை, கோபூஜை மற்றும் நவக்கிரக பூஜைகள் நடத்தப்படவுள்ளன. அதன்பின் அன்று காலை 9.00-10.00 மணிக்குள் பால்காய்ச்சி, பொங்கல் வைத்து வழிபாடுகளும் அதனைத் தொடர்ந்து அன்னதானமும் நடத்தப்படவுள்ளன.

**தகவல்: A. முருகானந்தம், செய்தித் தொடர்பாளர், நத்தம்.**

# அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம் சிங்கம்புணரி புதிய நிர்வாகிகள்

சிங்கம்புணரி அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்க புதிய நிர்வாகிகள் கீழ்க்கண்டவாறு 16.10.2022 முதல் தேர்வு செய்யப்பட்டுள்ளார்கள்.

| | | |
|---|---|---|
| தலைவர் | : | திரு S. இளங்கோ செட்டியார் |
| துணைத் தலைவர் | : | திரு S.N.R. சேது செட்டியார் |
| செயலாளர் | : | திரு V. ரமேஷ் செட்டியார் |
| துணைச் செயலாளர் | : | திரு A.P. குணசேகரன் செட்டியார் |
| பொருளாளர் | : | திரு G. விஸ்வநாதன் செட்டியார் |

தகவல்: திரு S. இளங்கோ செட்டியார், தலைவர், சிங்கம்புணரி.

புதிதாக தேர்வு செய்யப்பட்டுள்ள புதிய நிர்வாகிகளின் பணி சிறக்க வாழ்த்துகிறோம்! வாழ்க வளமுடன்!!

**–கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகிகள்**



# கணக்கு வழக்குப் பார்த்து முயற்சியைத் தொடங்கு

அப்பா.. கார் புரோக்கர் வந்திருக்காரு.. நல்ல கார் குறைந்த விலைக்கு வருதாம்... நீங்க பார்த்திட்டீங்கன்னா முடிச்சுடலாம்னு சொன்னாரு... சாய்வு நாற்காலியில் படுத்திருந்த ராமசாமி எழுந்திருந்தார். ராமசாமிக்கு அப்படியொன்றும் வயதாகி விடவில்லை. அடுத்த ஆவணியில் தான் அவர் அறுபதைத் தொடப் போகிறார். பாழாய்ப் போன சர்க்கரை நோய் அவரது சுறுசுறுப்பைக் குறைத்திருந்தது. கிராமத்தை ஒட்டி ரைஸ்மில் வைத்திருக்கிறார். நெல் அவித்து அரைத்துக் கொடுப்பது தொழில். இதுவரை மோட்டார் பைக்கில் போய் வந்து கொண்டிருந்தார். இப்போது கொஞ்சம் சோர்வு என்பதால் அவரது மகன், காரில் போயிட்டு வாங்கப்பா, செக்கண்ட் ஹேண்ட் கார் கிடைத்தால் வாங்கிக் கொள்ளலாம் என்று சொல்லியிருந்தார். ராமசாமிக்கும் அதில் உடன்பாடு இருந்தது.

“ஐயா, நம்ம மருந்துக்கடை மாணிக்கம் வச்சிருந்த கார். வாங்கி ஒரு வருசம்தான் ஆகுது. பெரிய கார் வாங்கிறதுனால இதைக் கொடுத்திடலாம்னு முடிவுக்கு வந்திருக்கிறார். உங்களுக்குப் பிடிச்சிருந்தா முடிச்சிடலாம்.” கார் புரோக்கர் சொல்லிக் கொண்டே போக, ராமசாமி குறுக்கிட்டு, இப்ப கார் வேண்டாம்னு முடிவு செஞ்சிட்டேன் என்றார். புரோக்கருக்கு அதிர்ச்சி. தம்பிதான் உங்களுக்கு கார் வேணும்னு சொன்னாரு... எனச் சொல்லியவாறே ராமசாமியின் மகனைப் பார்த்தார். ராமசாமியின் மகனும், என்னாச்சுன்னு தெரியல்லையே என்பதைப் போல உதட்டைப் பிதுக்கிக் கையை விரித்தார். இப்ப ரைஸ் மில் முன்னப்போல ஓட்டம் இல்லை.. அதனால கார் வாங்கிறதைக் கொஞ்சம் தள்ளிப்போடலாம்னு நினைச்சிருக்கேன். அப்படி வாங்கணும்னு நினைச்சா நீங்க தான் வாங்கித் தாரீங்க.. என புரோக்கரை பார்த்து உற்சாகக் குரலில் சொன்னார் ராமசாமி. புரோக்கரும் கிளம்பினார்.

என்னப்பா உங்ககிட்ட கேட்டுட்டுத்தானே முடிவு செஞ்சேன். வார்த்தையில் ஆத்திரம் பொத்துக் கொண்டு வந்தது

ராமசாமியின் மகனுக்கு. எனக்கும் காரில் போக ஆசைதான். ஆனால் கார் பற்றி உனக்கோ எனக்கோ என்ன தெரியும். ஒரு டிரைவரை சம்பளத்துக்குப் போட்டு, பெட்ரோல் ஊற்றி, சின்னச் சின்னச் செலவு செய்தால் கூட மாதம் 25 ஆயிரம் ஆயிடும். அதுக்குப் பதிலாக ரைஸ்மில்லுக்கு ஆட்டோவில் போயிட்டு வந்தால் தினமும் 200 ரூபாய் வீதம் மாதம் ஆறாயிரம் தான் ஆகும். அதுமட்டுமில்லாமல் நம்ம ஊர் ஆட்டோ டிரைவர் ஒருவருக்கு மாதம் ஒரு வருமானம் கிடைத்தது போல இருக்கும். காருக்கு நாம செலவு செய்யற பணத்தை நம்ம மில்லில் வேலைபார்க்கிறவங்களுக்கு 100, 200ன்னு கூட்டிக் கொடுத்தால் அவங்களும் சந்தோஷப்படுவாங்க இல்லையா? அதுதான் கார் வாங்கிற முடிவை ஒத்திவச்சேன். ரொம்ப நல்ல முடிவு. எப்படியப்பா திடீர்ன்னு தோணிச்சு....

நான் படிச்ச திருக்குறள்தான் வழிகாட்டிச்சு,

அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல்

என்கிற திருக்குறள். அதாவது ஒரு முயற்சியில் ஈடுபடுவதற்கு முன்பாக, அதனால் வரும் கேட்டினையும், ஆக்கத்தையும் இவற்றால் நின்று வரும் ஊதியத்தையும் சீர்தூக்கி ஆராய்ந்து முயலுதல் வேண்டும் என்பது அதன் பொருள். குறிப்பாக வழி பயக்கும் ஊதியம் என்றால் என்ன? கணக்கு வழக்குப் பார்த்து முயற்சியைத் தொடங்கு என்று அர்த்தம்.

அப்பா..இனி நம்மவழி...குறள்வழி தான்.. மகன் சொல்ல மகிழ்வுடன் லேசாக தலையை அசைத்தார் ராமசாமி.

**எஸ். இளங்கோவன், B.E.,PTE. திண்டுக்கல். 9486732753**

★ ★ ★ ★ ★

## சிவபூஜை செய்வதற்கு முன் பாட வேண்டிய பாடல் :



கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்..
முப்போதும் முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை..
அப்போது மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி..
எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே

– திருநாவுக்கரசு சுவாமிகள்

# நிச்சயதார்த்த விழா நிகழ்ச்சி



28.10.2022 வெள்ளிக்கிழமை அன்று கட்டுக்குடிப்பட்டி கழுகக்கூருடையார் திரு S. அசோகன் செட்டியார் திருமதி யோகச்சித்ரா ஆச்சி இவர்களின் புதல்வி திருவளர்ச் செல்வி **மயிலம்மாள் (எ) ஆர்த்தி B.E.** க்கும், சிறுகுடி மேலூருடையார் கோயம்புத்தூரில் வசிக்கும் திரு RM.A. கண்ணன் செட்டியார் – திருமதி அன்பு பிரியாள் ஆச்சி இவர்களின் திருவளர்ச் செல்வன் **K. அரவிந்தன் B.Tech.க்கும்** திருமண நிச்சியதார்த்த விழா பொன்னமராவதி வலையபட்டி மெய்யப்பா வள்ளியம்மை மஹாலில் உறவினர்கள், நண்பர்கள் முன்னிலையில் இனிதே சிறப்பாக நடைபெற்றது.

**தகவல் : திரு ச. இராமநாதன் செட்டியார், புழுதிபட்டி**

## 2021-2022-ல் பெருந்தொகை வழங்கிய நன்கொடையாளர்கள் 31.03.2022

**மாபெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **A.P. ஸேதுராமன் – விஜயலட்சுமி,** கோவை.
2. திரு. **செல்வன் R.M. செந்தில்,** பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. இராமநாதன் – சிவசக்தி** (செம்பதி) துபாய்.

**பெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார் – பாப்பா ஆச்சி,** மதுரை.

**கொடை வள்ளல்கள் :**

1. திருமதி. **இராம. லதா அவர்கள்,** நத்தம்.
2. திரு. **து. அரவிந்த் குமார் B.E., M.S., – பத்மா B.E.,** சென்னை.
3. தெய்வத்திரு. STKR. **சக்திவேல் – ராஜலெட்சுமி,** பொன்னமராவதி.

**வள்ளல்கள் :**

1. திரு. **M. பாலகிருஷ்ணன் – பானுமதி ஆச்சி,** சிங்கம்புணரி.
2. திரு. **செ. ஆசை அலங்காரம் குடும்பத்தார்,** சிறுகுடி.
3. திரு. **M.S. முருகப்பன்,** பொன்னமராவதி.
4. திரு. **சொ. முருகேசன் – கவிதா,** சிவகாசி.
5. திரு. A. முருகன் - செல்வமணி நீடாமங்கலம்
6. திரு. T.M.R.S. சிவக்குமார் - அருணோதயம், கோவை
7. திரு. ம.சி.கு.கு. கணேசன் செட்டியார் - தென்னசரசி ஆச்சி கோவை

**6-12 மாணவர்களுக்கு உதவித்தொகை வழங்கும் நன்கொடையாளர்கள்**

1. **சிங்கம்புணரி மீனாட்சி நல்லதம்பி வலச்சேரிப்பட்டி தெய்வானை வள்ளியப்பன்** நினைவாக அவந பொதுநலச்சங்கம், பிரான்மலை.
2. தெய்வத்திரு. **மு.அ. பரமசிவம் செட்டியார் – அங்கம்மாள் ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார் – பாப்பா ஆச்சி** குடும்பத்தார், மதுரை.
4. திரு. **தே.மா. பழனிச்சாமி செட்டியார் – பழ. சரஸ்வதி ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
5. தெய்வத்திரு. **தீ.பழ. பொன்னுச்சாமி செட்டியார் – அன்னமயிலி ஆச்சி** நினைவாக A.P. **ஸேதுராமன் – விஜயலட்சுமி,** கோவை.

**தங்கப்பதக்கம் வழங்கும் நன்கொடையாளர்கள் : 10ஆம் வகுப்பு**

1. முதல் கல்வி காவலர் நினைவாக, கல்விக்காவலர், கல்வி தாய் தந்தை சுப.நேசமணி செட்டியார் - புவனேஸ்வரி ஆச்சி சார்பாக கேப்டன். நே. சரவணன் பிரியா - சச்சின் நங்கநல்லூர் - சென்னை - 61
2. **அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம்,** கோவை.
3. திரு. **ஆ. ஆறுமுகம் – சாந்தி,** கோவை.

**12ஆம் வகுப்பு**

4. திரு. **அரு.சோம. சண்முகநாதன் – சிவகாமி,** தூத்துக்குடி.
5. முதல் கல்வி காவலர் நினைவாக கல்விகாவலர். சுப. செல்வம் செட்டியார் ஆனந்தம் ஆச்சி சார்பாக செ.இளவரசன் - விசாலா. நங்கநல்லூர், சென்னை - 61

# சிவபாதம் சேர்ந்தார்



அஞ்செழுத்து ஓதி, அங்கி வேட்டு, நல் வேள்வி எல்லாம்
நஞ்சனி கண்டர் பாதம், நண்ணிடச் செய்து, ஞாலத்து
எஞ்சலில் அடியார்க்கு, என்றும் இடையரு அன்பால், வள்ளல்
தஞ்செயல் வாய்ப்ப, ஈசர் தாள் நிழல் தங்கினாரே.

– திருமுறை



நத்தம் தெய்வத்திரு N.V. கேசவன் செட்டியார் மனைவியும் திரு K. நல்லதம்பி தாயாருமான **K. மீனாம்பாள் ஆச்சி** 06-11-2022 ஞாயிற்றுக்கிழமை அன்று இறைவனடி சேர்ந்தார்.

**தகவல் : G. அலங்காரம், பொன்னமராவதி**

---



சிங்கம்புணரி தெய்வத்திரு ம. முத்தாண்டி செட்டியார் மகன் **திரு ப.மு. கணேசன் செட்டியார்** (வயது 87) 03-12-2022 அன்று இறைவனடி சேர்ந்தார்.

---

**தங்களது சொந்தங்களை இழந்து தவிக்கும் உற்றார் உறவினர்களுக்கு அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகத்தின் சார்பாக ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.**

**– நிர்வாகிகள்**

## தர்ப்பணம்

உத்தராயணத்தில் அதாவது தை மாதப் பிறப்பன்று மாசம் பிறந்த பின்பு தான் தர்ப்பணம் பண்ண வேண்டும். தட்சிணாயனத்தில் ஆடி மாதப் பிறப்பன்று மாதம் பிறக்கும் முன்னே தர்ப்பணம் பண்ண வேண்டும். ஆக இரண்டு தர்ப்பணங்களையும் உத்தராயணத்திலேயே பண்ண வேண்டும்.

**- S. யுவராணி, சிறுகுடி**



# பொங்கல் திருநாள்



நாம் பாரம்பரிய பண்பாட்டின்படி எண்ணற்ற விழாக்களை கொண்டாடி வருகின்றோம். அவற்றில் மிக முக்கியமாக கொண்டாடப்படுவது தமிழர் திருநாள் என அழைக்கப்படும் பொங்கல் விழா. மற்ற விழாக்கள் எல்லாம் ஒரே நாளில் கொண்டாடி முடிந்து விடும். ஆனால் பொங்கல் விழா தொடர்ந்து நான்கு நாட்கள் மகிழ்வுடன் கொண்டாடி வருகின்றோம். இவ்விழாவிற்கு அரசு நான்கு நாட்கள் தொடர் விடுமுறை அளிக்கின்றது. வேறு விழாக்களுக்கு இச்சிறப்பு கிடையாது. இவ்விழாவினை நம் முன்னோர்கள் மிக சிறப்பாக கொண்டாடி இருக்கின்றார்கள். நம் தமிழ் மாதங்களில் ஒரே எழுத்தில் தை என மலரும் மாதம் என்ற சிறப்பினைக் கொண்டது. நம் முன்னோர்கள் ‘தை பிறந்தால் வழி பிறக்கும் தை பிறந்தால் தங்கம் வரும்’ என பழமொழிகளை சொல்வார்கள். நம் பண்பாட்டின்படி இவ்விழாவினை நாம் முதல்நாள் சூரிய பகவானுக்கு தைப் பொங்கல் இரண்டாம் நாள் மாட்டுப் பொங்கல், மூன்றாம் நாள் கறி நாள் என்றும் திருவள்ளுவர் தினம் எனவும், நான்காம் நாள் காணும் பொங்கல் என்றும் கொண்டாடி வருகின்றோம். இன்றும் நம் கிராமப்புற பகுதிகளில் பதினைந்து நாட்களுக்கு முன்னதாகவே அவர் தம் இல்லங்களை சுத்தப்படுத்தி வர்ணம் தீட்டி விடுவார்கள். தை மாதம் 1-ம் தேதி வீட்டுப் பொங்கலாக கொண்டாடுகிறோம். அன்றைய தினம் அவரவர் வீட்டு வாசலில் வண்ண கோலமிட்டு, நிலைக் கதவுகளில் மா இலை, பூ தோரணம் கட்டி அலங்கரித்து, பொங்கலிடுகிறார்கள். இந்நாளில் சூரிய பகவானுக்கும், அவரவர் இஷ்ட தெய்வங்களுக்கும் படையலிட்டு வணங்கி மகிழ்கிறார்கள். மாட்டுப் பொங்கலன்று விவசாயிகள் தங்கள் மாடுகளை குளிப்பாட்டி, கொம்புகளுக்கு வர்ணம் தீட்டி, புதிய வேஷ்டி, துண்டு கட்டி பொங்கல் படையலிட்டு வழிபட்டு மாடுகளுக்கு உணவு ஊட்டி மகிழ்வார்கள். பொங்கல் திருநாட்களில் நம் விவசாயிகள் விவசாயப் பொருட்களை அறுவடை செய்தும், குலதெய்வங்களை வணங்கியும் மகிழ்வார்கள்.

**- N. சேதுராமன், சேலம்.**

# சதாபிஷேக விழா

வா. புதூர் தெய்வத்திரு மு. அலங்காரம் செட்டியார் – மயிலம்மாள் ஆச்சி அவர்களின் மூத்த புதல்வர் (திண்டுக்கல் சாலையூர் என்.எஸ்.நகர்) **சிவத்திரு முத்துக்கருப்பன் செட்டியார்-சிவத்திரு ரோஜா ஆச்சி** தம்பதிகளின் **சதாபிஷேக (80ஆம் ஆண்டு) விழா 2022 அக்டோபர் 31 மற்றும் நவம்பர் 1–ம்** தேதிகளில் திண்டுக்கல் அ.வ.ந. திருமண மண்டபத்தில் இனிதே நடைபெற்றது.

விழா ஏற்பாடுகளை நமது சமூகத்தைச் சார்ந்த தவத்திரு ஈசான்ய சிவ சுப்பிரமணியம் சுவாமிகள் ஸ்ரீ அரசு பார்மா திண்டுக்கல் முன்னேற்பாடுகளுடன் திண்டுக்கல் சிவபுர ஆதீனம் முதலாவது குரு மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ திருநாவுக்கரசு தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் வருகை தந்து யாக வேள்விகளில் முன்னிலை வகித்து தம்பதிகளுக்கு அருளாசியும் ஆசியுரையும் வழங்கி வாழ்த்தி சிறப்பித்தார்கள். விழா சுற்றமும் நட்பும் சூழ இனிதே நிறைவு பெற்றது.

**தகவல் : திரு சொ. செந்தில் குரு, பொன்னமராவதி**



# நம்மவர்

# வீடு கிரகப்பிரவேசம்

**திரு சுபாஷ் சந்திரபோஸ் செட்டியார் - திருமதி கீதா ஆச்சி தம்பதியரால்** பொன்னமராவதி பூக்குடி வீதியில் புதிதாக கட்டப்பட்ட வீடு கிரகப்பிரவேசம் 05.12.2022-ஆம் நாள் மிகச் சிறப்பாக கொண்டாடப்பட்டது. உற்றார் உறவினர்கள், நண்பர்கள் விழாவில் கலந்து கொண்டு வாழ்த்திச் சிறப்பித்தனர்.

**தகவல் : தேசிய நல்லாசிரியர்**
**திரு நா. திருநாவுக்கரசு – சந்திரா, பொன்னமராவதி**

# இரண்டாம் ஆண்டு
# நினைவு அஞ்சலி

தோற்றம்
**01-04-2011**



மறைவு
**27-01-2021**

## தெய்வத்திரு தங்கம்மாள் என்கிற சஹானா

இந்த மண்ணை விட்டுப்பிரிந்து ஓராண்டாகியும்
எங்கள் மனதை விட்டுப் பிரியாத செல்லமே!
எங்கள் நெஞ்சங்களில் அன்பை வளர்த்த நீ
ஏன் எங்கள் கண்களில் கண்ணீரை வளர்த்தாய்?

என்றும் நினைவுகளுடன்

**P. அசோகன் செட்டியார் – ஜெயலதா ஆச்சி**
**குடும்பத்தினர்**

வெங்கிட்டாபுரம், கோயமுத்தூர்

# 4 ஆம் ஆண்டு
# நினைவு அஞ்சலி



**தெய்வத்திருமதி. A. விஜயலட்சுமி ஆச்சி**
பொன்னமராவதி

நினைவு நாள்: 30-01-2019

**எங்களைப் பிரிந்து சிவபாதம் சேர்ந்த உங்களுக்கு
கண்ணீர் மலர்தூவி அஞ்சலி செலுத்துகிறோம்
என்றும் உங்கள் நினைவில் வாழும்**

**சிறுகுடி ஸ்ரீ பாப்பாத்தி அம்மன்
சாமியாடி குடும்பத்தார்கள்**

கணவர்: **திரு G. அன்புச் செல்வன்**
மகன்: **திரு A. குபேந்திரன்**
அலைபேசி எண்கள்:
**99423 07869, 86675 09383**

# கேள்விக்கென்ன பதில்

**பதில் :** முருகன் ஒரு கார் டிரைவர். ஒரு நாள் அவர் ஒருவழிப் பாதையின் வழியே சென்று கொண்டிருந்தார். **அவர் காரை ஓட்டிச் செல்லவில்லை.** நடந்து சென்றார். அதனால் அவரை காவல்துறையினர் கண்டிக்கவில்லை; அபராதமும் விதிக்கவில்லை.

சைதன்யா ஸ்ரீகிருஷ்ணாவின் கேள்விக்கு சரியான பதிலை **முதன்முதலாக** எழுதி அனுப்பி பரிசு பெற்றவர் திரு இளையராஜா.

ஆர்வமுடன் பதில் அனுப்பிய அனைவருக்கும் வாழ்த்துக்கள்.

**– செ. ஆசை அலங்காரம்,**
**பதிப்பாசிரியர், நகரத்தார் குரல்.**

# வாசகர் குரல்



## வாசகர் குரல் : 162 – 1

1. நவம்பர் 2022 மாத குரல் இதழில் 'நல்வாழ்வு யோகா' என்ற தலைப்பில் திருமதி ஆனந்த செல்வம் எழுதி இருந்த யோகா விழிப்புணர்வு கட்டுரை அனைவருக்கும் பயனுள்ளதாக இருந்தது. யோகாவால் நமக்கு கிடைக்கும் அமைதி நம் உடலுக்கு கிடைக்கக் கூடிய மருத்துவக் குணங்கள் பற்றியும் நன்றாக விவரித்து எழுதி இருந்தார். யோகாவிற்காக நாம் அனைவரும் குறைந்தது அரைமணி நேரமாவது ஒதுக்க வேண்டும். யோக நல்வாழ்வுக் கட்டுரை எழுதிய ஆனந்த செல்வம் அவர்களுக்கு வாழ்த்துக்கள்.

2. நம் நகரத்தார் குரல் இதழில் தொடர்ந்து எழுதி வந்த நமது சைவப்புலவர் திருவையாறு சுந்தரம் ஐயா அவர்களின் ஆன்மீக தொடர் கட்டுரை அனைவருக்கும் படிக்கவும், ஆன்மீகம் பற்றி தெரிந்து கொள்வதற்கும் நம் இளைய சமூகத்தினர்க்கு உதவியாகவும் இருந்தது. அதனால் சைவப்புலவர் திருவையாறு சுந்தரம் அவர்கள் மீண்டும் ஆன்மீக தொடர் கட்டுரையை எழுதினால் நல்லது. வாசகர்களுக்கு பயனுள்ளதாக இருக்கும்.

**- N. சேதுராமன், சேலம்.**

## வாசகர் குரல் : 162 – 2

பொன்னமராவதி அ.வ.ந. சங்க 50 வது ஆண்டு பொன்விழாவும், இளைஞர் பேரவையின் 40-வது ஆண்டு விழாவும், பொன்னமராவதி திலகவதியார் அருள் நெறி சங்க விழாவும் மிக மிக பெருமைக்குரிய வகையில் நடைபெற்றன. மாதர் சங்கம் திலகவதியார் அருள்நெறி மன்றம் என்பது நமது சங்கத்தின் முதல் மாதர் சங்கமாக செயல்பட்டு பிற சங்கங்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்கியது. மேற்கண்ட மூன்று சங்கங்களும் ஒற்றுமைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இச்சங்கங்கள் மேலும் வளர எனது வாழ்த்துக்கள்.

**- P. சிவன்ஜோதி – மல்லிகா குடும்பம், தஞ்சாவூர்**

## வாசகர் குரல் : 162 – 3

1. நவம்பர் 2022 மாத குரலில் உயர்திரு சொ. வைத்தியலிங்கம் ஐயா அவர்கள் எழுதிய "படித்ததில் புடித்தது – 2" பாலம் கல்யாணசுந்தரம் ஐயா பற்றி படித்தேன். உண்மையில் ஆச்சர்யப்பட்டுப் போனேன். இப்படியும் ஒரு மனிதரா? அதுவும் இந்த கலியுகத்தில் என்று வியந்து போனேன். பாலம்

கல்யாணசுந்தரம் ஐயா அவர்கள் தாய் சொல்லைத் தட்டாமல் அவரின் அறிவுரையை வேதவாக்காக ஏற்று வாழ்வில் செய்து காண்பித்து விட்டார்.

2. திருமதி Dr. சூர்யகலா Ph.D. அவர்களின் 'சிந்தனைக் களம்' படித்தேன். மிக மிக அருமை. அத்தனையும் அனுபவத்தில் கண்ட உண்மை. நம் ஆழ் மனதில் என்ன நினைக்கிறோமோ அது அப்படியே நடக்கும். அதனால் நாம் அனைவரும் தினம் தினம் காலை எழுந்தவுடன் "இன்றைய தினம் நடப்பது எல்லாம் நன்மையாக நடக்க வேண்டும். இறைவா!" என்று வேண்டிக் கொண்டால் நல்லதே நடக்கும் (நல்லதை நினை; நல்லதை செய்; நல்லதே நடக்கும்) இது அத்தனையும் உண்மை-நிச்சயம்.

3. தன்னம்பிக்கை கதை படித்தேன். படித்து முடித்தவுடன் எதையும் முயற்சி செய்து பார்க்க வேண்டும். முயற்சி செய்யாமல் இருக்கக்கூடாது என்று எனக்கு தன்னம்பிக்கை வந்தது.

**-க. மஞ்சுளா கணேசமூர்த்தி, சொக்கம்பட்டி**

**வாசகர் குரல் : 162 – 4**

திருச்சி to கொல்லிமலை 300 கி.மீ. (மலைப் பாதையுடன்) சைக்கிள் பயணம் 20 மணி நேரம் ஓட்டி சாதனை படைத்த நம்மவர் பொன்னமராவதி அன்பு வணிக நிலையம் திரு P. சொக்கலிங்கம் செட்டியார் – திருமதி பொற்செல்வி ஆச்சி தம்பதியரின் புதல்வரும், திருமதி S. ஸ்ரீரஞ்சனியின் கணவருமான திரு சொ. மகாபிரபு அவர்களைப் பாராட்டுகிறோம்.

**- A.P. ஸேதுராமன் & குடும்பத்தினர், அரசு மெடிக்கல், கோவை மற்றும் அ.வ.ந. சங்கம், கோவை.**

## அருள்மிகு உடையம்பாள் கோவில் கும்பாபிஷேகம்

வலைச்சேரிப்பட்டியில் செல்வாக்கோடு சிறப்பாக வாழ்ந்த மேலூருடையார் அமரர் முத்து உடையப்பன் (ஏ) தங்கக்காளை செட்டியார் அவர்களின் பங்காளிகளின் குலதெய்வமான அருள்மிகு உடையம்பாள் கோவில் வீட்டின் கும்பாபிஷேகம் 04.11.2022 அன்று ஆகம விதிப்படி முறையாக பூஜைகள் நடத்தி வெகு சிறப்பாக நடைபெற்றது. விழா ஏற்பாடுகளை திருவையாறு திரு S.M. அருணாசலம் மற்றும் அவரின் குடும்பத்தினரும் பங்காளிகளும் சிறப்பாக செய்தார்கள்.

**தகவல் : S.ஆசை அலங்காரம், தலைவர், அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்.**

# பொங்கல் கவிதை



தை தை என்ற தாளத்தோடு
ஆடி வரும் தைத் திங்களே வா வா
பொங்கல் பெருநாளாம்
தைப் பொங்கல் திருநாளாம்
மகிழ்ச்சி பொங்கும்
தமிழ்ப்பண்பாட்டு திருநாளாம்
இல்லங்களில் வர்ணங்களும்
வாயில் கோலங்களும் வரவேற்கின்றன.
மா இலை புஷ்ப தோரணங்கள்
மகிழ்ச்சியாக மலர்கின்றன
பழையன கழியட்டும்
புதியன புகுதலாகட்டும்
அல்லவை அழியட்டும்
நல்லவை நடக்கட்டும்
புத்தாடை சிறக்கட்டும்
தைப்பொங்கலும் பொங்கி வழியட்டும்
சல் சல் என சலங்கை ஒலி
துள்ளி வருது கோவில் மாடு
ஏறு கொண்டு உழைத்த
காளைகள் ஏற்றமுடன் வளரட்டும்
உழவரின் சிறப்பை
உலகிற்கு உயர்த்துவோம்
வீரத்தோடும் விவேகத்தோடும்
ஓடி விளையாடுது ஜல்லிக்கட்டு காளை
பாரம்பரியம் பரவட்டும்
பயன்பெறும் வகையில்
அன்பையும் ஒற்றுமையையும்
உறவுகளிடம் உணர்த்துவோம்
இத்தகைய பெருமைகள் நிறைந்த
பொங்கல் திருநாளை
அனைவரும் மகிழ்ச்சியாக
கொண்டாடி மகிழ்ந்திட
பொங்கி வருது தங்களுக்கு
இனிய பொங்கல் நல்வாழ்த்துகள்
இன்பமுடன் ஆங்கில
புத்தாண்டு வாழ்த்துக்கள்



**– N. சேதுராமன்,**
**சேலம்.**



உ

ஸ்ரீ வயிரவ சுவாமி துணை

வாழ்த்துகளுடன்

கடை: 94432 06431
97867 46431

வீடு: 97874 81103



# சிவசக்தி ஸ்டோர்ஸ்

279, அண்ணாசாலை,

**பொன்னமராவதி.**

**மளிகை, ஆயில், ஸ்டேசனரி மற்றும்
குளிர்பானங்கள் மொத்தம் & சில்லறை**

# அன்னம் டிரேடர்ஸ்



வடுகநாதன் ரோடு,
KVB பேங்க் அருகில்,
**பொன்னமராவதி.**



ஸ்டாக்கிஸ்ட்:
**நெஸ்டில், மைசூர் சோப்,
ராஜம் சுக்கு காபி,
பண்ணாரி மைதா.**

# ராஜா கெஸ்ட் ஹவுஸ்

KVB பேங்க் அருகில், **பொன்னமராவதி.**

முற்றிலும் குளிரூட்டப்பட்ட (A/C) ரூம்கள்,
சிறிய பெரிய அளவுகளில், நிறைந்த வசதிகளுடன்,
நிறைவான கட்டணத்தில்,
நகரின் மத்தியில் தரமான தங்கும் விடுதி.



# கோவை கந்தன் கருணை ஆலய கந்தசஷ்டி பெருவிழா

நடத்துபவர் : முருகனடிமை சே. மனோகரன்



ஒவ்வோர் ஆண்டும் மாபெரும் கந்தசஷ்டி பெருவிழா, கோவை கவுண்டம்பாளையத்தில் அமைந்துள்ள மணி மஹாலில் முருகனடிமை சே. மனோகரன் அவர்கள் தலைமையில் வெகுவிமரிசையாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. இந்த ஆண்டு 17-ம் ஆண்டு மாபெரும் கந்தசஷ்டிப் பெருவிழா மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. 17-ம் ஆண்டு கந்தசஷ்டிப் பெருவிழாவின் சிறப்பம்சம் என்னவென்றால் திருச்செந்தூர் ஸ்ரீ செந்திலாண்டவருடைய உத்தரவின்படி விழித்தார், தந்தார், எடுத்தார்..

நமது முருகனடிமை சே. மனோகரன் அவர்கள் 13.09.2022 முதல் 30.10.2022 வரை 48 நாட்கள் மௌன விரதம் கடைப்பிடித்து வந்தார்கள். கந்தசஷ்டி விரதத்தின் ஆறு நாட்கள் 25-10-2022 முதல் 30-10-2022 வரை கண்மூடி, மௌன விரதம் கடைப்பிடித்து வந்தார்கள். எம்பெருமான் முருகவேலனுக்கு கந்தசஷ்டி விரதத்தின் ஆறு நாட்களுமே, ஒவ்வொரு நாளும், மூன்று காலபூஜையும் (காலை 6 மணி, மதியம் 12 மணி, மாலை 6 மணி) மிகவும் சிறப்பாக தீப ஆராதனையோடு நடைபெற்றது. ஒவ்வொரு நாளும் இன்னிசை நிகழ்ச்சி மற்றும் பரத நாட்டிய நிகழ்ச்சி மிகவும் சிறப்பாக நடைபெற்றது.

சூரசம்ஹாரத்தின் ஆறாம் நாள் மாலை 6 மணிக்கு எம்பெருமானுக்கு சிறப்பு தீப ஆராதனை காண்பித்தவுடன் அடியார் அவர்கள் 48 நாட்கள் மௌனவிரதம் கலைந்து சிறப்பு சொற்பொழிவு ஆற்றினார்கள். பக்தர்கள் அனைவரும் திரளாக வந்து கலந்து கொண்டு, ஸ்ரீ முருகப்பெருமானின் அருளாசியைப் பெற்றுச் சென்றனர்.

திருச்செந்தூர் அருள்மிகு ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளுடைய உத்தரவுப்படி நமது முருகனடிமை அவர்கள் வாரந்தோறும் செவ்வாய்க்கிழமை அன்று முழுமையாக கண்மூடி இருந்து விரதம் கடைபிடிக்கிறார். ஒவ்வொரு வாரமும் செவ்வாய்க்கிழமை அன்று சங்கொலி முழங்க நாதஸ்வரம் இசைக்க, மேளதாளத்துடன் ஸ்ரீ சண்முகப்பெருமானுக்கு கந்தன் கருணை ஆலயத்தில் மிகவும் சிறப்பாக தீப ஆராதனை நடைபெற்று வருகிறது. இதுவரை 124 வாரங்கள் கண்மூடி விரதம் கடைப்பிடித்துள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்க ஒரு விசயமாகும்.

கோவை, கவுண்டம்பாளையம், இடையர்பாளையம் சாலை அங்கப்பா பள்ளி எதிர்புறம் ராகவேந்திரா கார்டன் KPK மஹால் அருகில் முருகப்பெருமானின் உத்தரவுப்படி நாள்தோறும் அன்னதானமும், சொற்பொழிவும் நடைபெறும் கூடம் திறக்கப்பட்டு நாள்தோறும் மதியம் 12 மணிக்கு 50 நபர்களுக்கு அன்னதானம் நடைபெற்று வருகிறது. மாலை சரியாக 6.30 மணிக்கு தினசரி விதவிதமான புதுமையான தலைப்புகளில் நமது முருகனடிமை அவர்கள் சொற்பொழிவாற்றி வருகிறார். மேலும் இதன் முழுவிபரம் தெரிந்து கொள்வதற்கு எங்கள் வளரும் முருகன் அருள் You tube channel ஐப் பார்க்கவும். தாங்கள் விரும்பும் நாட்களில் அன்னதானத்திற்கு பங்களிக்கலாம்.

கந்தன் கருணை ஆலய சஷ்டி விரதக்குழு,

சண்முகர் அறக்கட்டளை, கோவை.

தொடர்புக்கு : 9894059370, 9894438448.

## சித்தர்கள் பௌர்ணமி பூஜை

**ஆலவயல்** அ.வ.ந. சங்கத்தால் நடத்தப்படும் சித்தர்கள் பௌர்ணமி 131 வது பூஜை 7.12.2022 புதன்கிழமை அன்று சிறப்பாக நடைபெற்றது. பக்தர்கள், நகரத்தார்கள் திரளாக கலந்து கொண்டு அருள் பெற்றார்கள். கலந்து கொண்ட அனைவருக்கும் பிரசாதம் மற்றும் அன்னதானம் வழங்கப்பட்டன. **தகவல் : திரு பழ. சொக்கலிங்கன், ஆலவயல்**

# கணிதத் திறமைத் தேர்வில் வெற்றி



சிங்கம்புணரியைச் சேர்ந்த உயர்திரு வெ. பாஸ்கரன் செட்டியார் - தேன்மொழியாள் ஆச்சி மகன் வழிப் பேத்தியும், சிறுகுடி திரு அ.கெங்கேஸ்வரன் செட்டியார் - மாலதி ஆச்சி அவர்களின் மகள் வழிப் பேத்தியும், சென்னையில் வசிக்கும் **திரு பா. விஜயகுமார் - ஞபாதேவி அவர்களின் மகளுமாகிய செல்வி வி.ஞ. புவனிகா** 12.10.2022 அன்று அவரது பள்ளியில் நடந்த கணித திறமைத் தேர்வில் பள்ளியிலே மூன்றாம் இடம் பிடித்து பரிசு பெற்றுள்ளார். **தகவல் : திரு பா. விஜயகுமார், சென்னை**



# நம்மவர் புதுமனை புகுவிழா

சென்னை மேற்கு மாம்பழம் 5 விளக்கு அருகில் திரு சிதம்பரம் செட்டியார் - மல்லிகா ஆச்சி அவர்களின் மூத்த மகனும், திரு சுப்பிரமணியன் செட்டியார் - சிவகாமி ஆச்சி அவர்களின் வளர்ப்பு மகனும், திரு பழனிச்சாமி செட்டியார்-ஞானம் ஆச்சி ஆகியோரின் மருமகனுமாகிய **திரு அன்பு ராஜா - சுசீலா** ஆகியோரால் கட்டப்பட்ட புதிய வீடு **புதுமனை புகுவிழா 11.12.2022 ஞாயிற்றுக்கிழமை** அன்று நம்மவர் சிவாச்சாரியார் திரு நா.சுந்தரம் அவர்களின் திருமுறை வழிபாட்டின்படி எல்லா பூஜைகளுடன், மறுநாள் திங்கட்கிழமை அதிகாலை பால் காய்ச்சுதல், பொங்கல் வைத்தல் முதலிய சடங்குகளுடன் மிகச் சிறப்பாக நடைபெற்றது. உறவினர்களும், நண்பர்களும் வந்திருந்து வாழ்த்திச் சிறப்பித்தனர்.

**தகவல் : தேசிய நல்லாசிரியர் திரு நா. திருநாவுக்கரசு, பொன்னமராவதி**

# குறைந்த இரத்த சர்க்கரை

இன்றைய உலகில் நீரிழிவால் பாதிக்கப்படுபவர்களின் எண்ணிக்கை அதிகரித்த வண்ணம் உள்ளது. இந்நோய் வயது பாகுபாடின்றி அனைவரையும் பாதிப்படையச் செய்கிறது. இந்த நிலையால் நீரிழிவு நோய்க்கு சிகிச்சை எடுத்து வருபவர்கள் அடிக்கடி சந்திக்கிற பிரச்சனைகளில் ஒன்று இரத்தத்தில் குறைந்த சர்க்கரை அளவு. இரத்த சர்க்கரையை கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்ள எடுத்துக் கொள்ளும் இன்சுலின் உபயோகிப்பவர்களிடம் அதிக அளவில் காணப்படுகிறது.

ஆரோக்கியமாக இருக்கும் ஒரு நபருக்கு இரத்தச் சர்க்கரை சாதாரணமாக 120-140 மி.கி./டெ.லி. வரை இருக்கும். இந்த அளவு சர்க்கரை உடலில் இருப்பதற்கு கணையத்தில் சுரக்கப்படும் இன்சுலின் மற்றும் குளுக்கான் உதவுகிறது. ஆனால் நீரிழிவு உள்ளவர்களுக்கு கணையச் சுரப்பு பாதிக்கப்படுவதால் சரியான அளவில் இன்சுலின் கணையத்தில் சுரப்பதில்லை. இதனைச் சரிசெய்ய உணவுக் கட்டுப்பாடு, உடற்பயிற்சி மற்றும் இன்சுலின் ஊசி தேவைப்படுகிறது. இவற்றில் ஏதேனும் ஒன்றில் தவறு உண்டானாலும் ரத்தச் சர்க்கரை குறைந்துவிடும் அல்லது அதிகமாகி விடுகிறது. அந்த நேரத்தில் மயக்கம் ஏற்படுகிறது. ரத்தத்தில் சர்க்கரை அதிகமானாலும், மிகவும் குறைந்தாலும் மயக்கம் ஏற்படும். இதில் சர்க்கரை அளவு குறைவதால் ஏற்படும் மயக்கம் மிகவும் மோசமானது. உயிருக்கே ஆபத்தை ஏற்படுத்தக் கூடியது.

இரத்தத்தில் குளுக்கோஸ் அளவு 70 மி.கி. /டெ.லி. க்கு கீழ் குறையும் நிலையை தாழ்ந்த குளுக்கோஸ் நிலை என்று அழைக்கிறோம். நம்முடைய இரத்தத்தில் குளுக்கோஸ் அளவு 100 மி.கி./டெ.லி. க்குக் குறையாமல் இருந்தால் மூளைக்குத் தேவையான குளுக்கோஸ் சரியான அளவில் கிடைக்கும். ஆனால் இந்த அளவு 70 மி.கி. /டெ.லி கீழ் குறையும்போது மூளைக்கு குளுக்கோஸ் கிடைப்பது குறைகிறது. இதன் காரணமாக மூளை செல்கள் மூளை நரம்புகள் வேலை செய்யாமல் போகிறது. இதனால் மயக்கம் ஏற்படுகிறது.

**இரத்தத்தில் குறைந்த சர்க்கரை ஏற்படுவதற்கான காரணங்கள்:**

தேவைக்குச் சாப்பிடாமல் குறைந்த அளவில் உணவைச் சாப்பிடுதல்

தாமதமாகச் சாப்பிடுதல்

விரதம் இருத்தல்

இன்சுலின் அதிகமாக எடுத்தல்

நீரிழிவு நோய் மாத்திரைகள் மருத்துவ ஆலோசனை பெறாமல் எடுத்தல்.

அதிக நேர உடற்பயிற்சி அல்லது நடைப்பயிற்சி

வெறும் வயிற்றில் மது அருந்துதல்

**அதிக பாதிப்பு அடைபவர்கள் :**

இன்சுலின் ஊசி போட்டுக்கொள்பவர்களுக்கு இத்தகைய பாதிப்பு ஏற்படக்கூடும் மற்றும் டைப் 1 நீரிழிவு உள்ளவர் களுக்கும் 70 வயதுக்கு மேல் உள்ள வயதானவர்களுக்கும், மது அருந்துபவர்களுக்கும் கல்லீரல், சிறுநீரக நோய் உள்ளவர்களுக்கும் இத்தகைய பாதிப்புகள் ஏற்படும்.

**ஆரம்ப அறிகுறிகள் :**

ரத்தத்தில் குளுக்கோஸ் அளவு 60 மி.கி. / டெ.லி. க்கு கீழ் குறையும்போது உடலில் அதிக வியர்வை உண்டாகும். உடல் தளர்ச்சி மற்றும் குளிர்ச்சி ஏற்படும். பின்னர் படபடப்பு, உடல் நடுக்கம், தலைவலி, தலைசுற்றல், பார்வை குறைவு, இதயத் துடிப்பு அதிகரிப்பு போன்றவை ஏற்படும். அடுத்தடுத்த நிலைகளில் பேச்சு குமுறல், மனக்குழப்பம், அரை மயக்கம் போன்றவை உண்டாகக்கூடும். ஒருசில அறிகுறிகள் தென்பட்டவுடன் நீரிழிவு உள்ளவர்கள் சில முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் மேற்கொண்டால் கடும் பாதிப்பு ஏற்படாமல் பார்த்துக் கொள்ள முடியும்.

**உடனடியாக கடைபிடிக்க வேண்டிய முதலுதவிகள் சில :**

இரத்தத்தில் குளுக்கோஸ் அளவு குறைவதால்

உண்டாகும் அறிகுறிகள் தெரிந்தவுடன் வீட்டில் அல்லது அலுவலகத்தில் உடனடியாக முதலுதவிகள் சில அறிகுறிகள் தென்பட்டவுடன் 20-25 கிராம் குளுக்கோஸ் உடனடியாக சாப்பிட வேண்டும். குளுக்கோஸ் கிடைக்காதபோது சர்க்கரை, தேன், சாக்லேட், பழச்சாறு போன்றவற்றை உபயோகிக்கலாம். அவசரத்திற்கு கிடைக்கும் இனிப்பு பானங்களைப் பருகலாம். இந்த ஆரம்ப அறிகுறிகள் 10-15 நிமிடங்களுக்குள் சரியாகிவிடும் என்றாலும் சரியாகிவிட்டது என்று இருந்துவிடாமல் உரிய மருத்துவரின் ஆலோசனையைப் பெற வேண்டும். முக்கியமாக மாத்திரைகள் மாற்ற வேண்டுமா, உணவு முறையைச் சரி செய்ய வேண்டுமா அல்லது இன்சுலின் அளவைக் குறைக்க வேண்டுமா என்பது போன்ற விவரங்களை மருத்துவர் உதவியுடன் தெரிந்துகொண்டு தகுந்த சிகிச்சையைத் தொடர வேண்டும்.

**- K. இளவரசி கனகராஜ், இரத்தினபுரி, கோவை**

# சுவையும் சத்தும்




சுவை அறிந்து உண்டால் நோய் அண்டாது. உடல் உறுப்புகளின் செயல் திறனை மனதில் கொண்டு, சுவையைத் தேர்வு செய்ய வேண்டும்.

இனிப்பு – தசையைப் பெருக்கி வலு சேர்க்கும்
புளிப்பு – அமிலச் சத்தை உற்பத்தி செய்யும்
உப்பு – எலும்புக்கு வலு சேர்க்கும்
காரம் – உணர்வைப் பெருக்கி பலம் தரும்
கசப்பு – நிணநீர் சுரக்க உதவும்
துவர்ப்பு – ரத்தத்தை உற்பத்தி செய்யும்

வயதுக்கு ஏற்ப சுவையின் தேவை மாறுபடும். தசைகளுக்கு உகந்தது என்பதால் தான், இனிப்பு மீது குழந்தைகளுக்கு ஆர்வம் ஏற்படுகிறது. குழந்தை உணவில் இனிப்பும், உப்பும் அதிகம் இருக்கலாம்.

வாலிபப் பருவத்தில் காரம், புளிப்பு, இனிப்பு சுவையை அதிகம் சேர்க்கலாம். 40 வயதைக் கடந்த பின், கசப்பு துவர்ப்பு சார்ந்த உணவுகளை அதிகம் சேர்த்தால் நலம் மிகும். முதுமைப் பருவத்தில் எல்லாச் சுவைகளையும் அளவறிந்து உண்ண வேண்டும்.

காய்ச்சல், சளி, இருமலால் பாதிக்கப்படும் போது, புளிப்புச் சுவையை தவிர்க்க வேண்டும். இரத்த அழுத்த பாதிப்பு இருந்தால் உப்பு, கசப்பு கூடாது. தோலில் நோய் பாதிப்பிருந்தால், உப்பு, புளிப்பு கூடாது.

தூங்கி எழுந்து இரண்டு மணி நேரத்திற்குப் பின் உண்பது நல்லது. சாப்பிடும் நேரத்தை முறைப்படுத்திக் கொள்ள வேண்டியது அவசியம். உரிய கால இடைவெளிப்படி உண்ண வேண்டும்.

காலை உணவு – காலை 7.30 – 8.30 மணி
பகல் உணவு – பகல் 12.30 – 1.00 மணி
மாலை சிற்றுண்டி – பிற்பகல் 3.30 – 4.00 மணி
இரவு உணவு – மாலை 7.30 – 8.00 மணி

இவ்வாறு முறைப்படுத்தி நேரந் தவறாமல் சாப்பிடுவது நோயைத் தடுக்கும் மருந்தாக அமையும்.

**-K. சுவாதி M.S.W. இரத்தினபுரி, கோவை.**

# இணையவழி மோசடியைத் தவிர்க்க செய்யக்கூடாதவையும், செய்யக்கூடியவையும்



நாட்டில் தகவல் தொழில்நுட்ப வசதிகள் பெருகி வருகின்றன. இணையத்தைப் பயன்படுத்துவோர் எண்ணிக்கைத் தொடர்ந்து அதிகரித்து வருகிறது. பணப் பரிமாற்றத்தில் இணையம் வழங்கியுள்ள வசதிகள் அளப்பரியவை. பல்வேறு பலன்களை அவை வழங்கி வந்தாலும், சில அச்சுறுத்தல் களையும் தன்னகத்தே கொண்டுள்ளது. அதில் முக்கியமானது நிதிசார் அச்சுறுத்தல்கள்.

அறிதிறன்பேசியை (ஸ்மார்ட்போன்) பயன்படுத்தும் பெரும்பாலனோர் இணையவழிப் பணப்பரிமாற்ற வசதியைப் பயன்படுத்தி வருகின்றனர். அதை தங்களுக்குச் சாதகமாக்கி, பண மோசடியில் ஈடுபடுவோரின் எண்ணிக்கையும் அதிகரித்துள்ளது.

முதியோர், வேலைதேடும் இளைஞர்கள், இணைய விளையாட்டுக்களில் ஈடுபடுவோர் உள்ளிட்டோரை பணமோசடிக் கும்பல் தங்கள் வலையில் எளிதாக விழச் செய்து ஏமாற்றுகிறது. அத்தகைய கும்பல்களிடம் இருந்து தப்புவதற்கான விழிப்புணர்வை வங்கிகள் தொடர்ந்து மேற்கொண்டு வருகின்றன. குறுஞ்செய்தி வாயிலாக அவ்வப்போது வாடிக்கையாளர்களுக்குப் பணமோசடிக் கும்பல் தொடர்பான விழிப்புணர்வை வங்கிகள் ஏற்படுத்தி வருகின்றன. மத்திய, மாநில அரசுகளும் அத்தகைய விழிப்புணர்வு நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகின்றன.

நிதிசார் குற்றங்களுக்கு இரையாவதைத் தடுக்கும் வகையில் மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்த புதுமையான பாணியை இந்திய ரிசர்வ் வங்கி கையாண்டுள்ளது. “ராஜூவும் 40 திருடர்களும்” என்ற பெயரிலான சித்திர-உரையாடல் புத்தகத்தை (காமிக்ஸ்) இந்திய ரிசர்வ் வங்கி வெளியிட்டுள்ளது. அதில் ராஜூ என்ற நபர் எதிர்கொள்ளும் 40 வகையான முறைகேடுகள் குறித்து கதை வடிவில் கூறப்பட்டுள்ளது. ஒவ்வொரு முறைகேட்டின் இறுதியிலும்

வாடிக்கையாளர் செய்ய வேண்டிய-செய்யக்கூடாத விஷயங்கள் குறித்து எடுத்துரைக்கபட்டுள்ளது. அவற்றில் சில....

**செய்யக்கூடாதவை :**

1. குறுஞ்செய்தி (மெசேஜ்), மின்னஞ்சலில் (இ-மெயில்) வரும் அறிமுகமில்லாத **லிங்க்** களை ஆராயமல் தொடரக் கூடாது.
2. வங்கி ஏடிஎம் அட்டை எண், பணப்பறிமாற்றத்துக்கான ரகசிய எண் (ஓடிபி) உள்ளிட்ட ரகசிய தகவல்கள் எதையும் அறிமுகம் இல்லாத நபர்களிடம் பகிரக் கூடாது.
3. **வங்கியிலிருந்து பேசுகிறோம் என முகாந்திரம் இல்லாத கைப் பேசி எண்ணிலிருந்து வரும் அழைப்புகளை நம்பக்கூடாது.**
4. இணைய வழி பண பரிவர்த்தனைக்கான 'ஒடிபி' ரகசிய எண்ணும், 'யுபிஐ' எண்ணும் பணத்தை அனுப்புவதற்கு மட்டுமே தேவை. மற்றவரிடமிருந்து பணத்தைப் பெறுவதற்கு அது தேவை இல்லை. எக்காரணத்தைக் கொண்டும் அந்த எண்களை மற்றவர்களிடம் தெரிவிக்கக் கூடாது.
5. ஏடிஎம் அட்டையை அடையாளம் தெரியாத நபர்களிடம் வழங்கக் கூடாது. அந்த அட்டைகளில் ரகசிய எண்ணை எழுதி வைக்கக் கூடாது.
6. ஏடிஎம் களில் பணம் எடுக்க மூன்றாம் நபரின் உதவியை நாடக் கூடாது.
7. குறுஞ்செய்தி, மின்னஞ்சல் வாயிலாக வரும் 'லிங்க்'கள் மூலமாக எந்த ஒரு செயலியையும் பதிவிறக்கம் செய்யக் கூடாது.
8. பணம் அனுப்புவதற்கு மட்டுமே "க்யூஆர் கோட்" அவசியம். மற்றவரிடமிருந்து பணத்தைப் பெறுவதற்கு 'க்யூஆர்' கோடை ஸ்கேன் செய்ய வேண்டிய அவசியம் இல்லை.
9. கைபேசி எண், மின்னஞ்சல் முகவரி, நண்பர்களின் விவரங்கள் உள்ளிட்டவற்றை சமூக வலைதளங்கள், உள்ளிட்ட பொது இடங்களில் வெளிப்படையாகப் பகிர்தல் கூடாது.
10. பரிசு பெற்றுள்ளீர்கள் வேலை கிடைத்துவிட்டது என்பன போன்ற குறுஞ்செய்திகளையும், மின்னஞ்சல்களையும் ஒருபோதும் நம்பக் கூடாது.

11. வேலை வேண்டுமெனில் இவ்வளவு தொகை செலுத்த வேண்டும் என்று கூறும் நபர்களை நம்பி ஏமாறக் கூடாது.
12. பாதுகாப்பில்லாத வலைதளங்கள் (வெப்சைட்) வாயிலாக பணப் பரிவர்த்தனையை மேற்கொள்ளக்கூடாது.
13. வங்கி அதிகாரிகள் எனக் கூறிக்கொண்டு வரும் நபர்களின் அடையாள அட்டையை உறுதி செய்யாமல் எந்தவிதப் பணப் பரிவர்த்தனையையும் செய்யக்கூடாது.
14. அரசு சேவைகளையும், மானியங்களையும் பெறுவதற்குப் பணம் செலுத்த வேண்டும் என்று வரும் அழைப்புகளையும், குறுஞ் செய்திகளையும் நம்பக் கூடாது.
15. வீட்டிலிருந்தே வேலை என்று வரும் குறுஞ்செய்திகளையும், மின்னஞ்சல்களையும் (இ-மெயில்) நம்பக் கூடாது.
16. வேலை உள்ளிட்ட சார்ந்த இணையவழி ஒப்பந்தங்களில் வழக்கறிஞரின் ஆலோசனையின்றி கையொப்பமிடக் கூடாது.
17. வங்கிக் கடன் உள்ளிட்டவைப் பெறுவதற்குப் பணம் செலுத்த வேண்டிய அவசியம் இல்லை.

**செய்யக் கூடியவை :**

1. கேஒய்சி விவரங்களைப் புதுப்பித்தல் தொடர்பான குறுஞ் செய்திகளின் உண்மைத் தன்மை வங்கி அதிகாரிகளிடம் ஆலோசித்து முடிவெடுக்க வேண்டும்.
2. பண மோசடி குறித்து அருகில் உள்ள இணையவழி (சைபர் கிரைம்) குற்றத் தடுப்பு காவல் நிலையத்தில் புகார் அளிக்க வேண்டும்.
3. இணையவழி பணப் பரிவர்த்தனையின் போது வங்கி கணக்கு எண், யுபிஐ எண் உள்ளிட்டவற்றைச் சரிபார்த்துக் கொள்வது அவசியம்.
4. உங்கள் வங்கி கணக்கிலிருந்து பணம் மோசடி செய்யப்பட்டிருப்பது தெரிய வந்தால் உடனடியாக வங்கியைத் தொடர்பு கொண்டு தகவல் தெரிவிக்க வேண்டும். வங்கி கணக்கை விரைந்து முடக்குவதன் வாயிலாகக் கூடுதல் நிதியிழப்பைத் தடுக்க முடியும்.

5. கைபேசியின் ‘சிம்கார்டு’ தொலைந்து விட்டால் உடனடியாக சம்பந்தப்பட்ட தொலைதொடர்பு நிறுவனத்தைத் தொடர்பு கொண்டு அந்த எண்ணை முடக்க வேண்டும்.
6. இணைய வழியில் (ஆன்லைன்) பொருள்களை வாங்கும் போது விற்பனையாளரின் நம்பகத்தன்மையை உறுதி செய்து கொள்வது அவசியம். நம்பகமில்லா விற்பனையாளரிடம் முன்பணம் செலுத்தக் கூடாது.
7. வேலை வழங்கும் நிறுவனத்தை நேரடியாகத் தொடர்பு கொண்டு வேலை வாய்ப்பு குறித்த தகவல்களை உறுதி செய்து கொள்ள வேண்டும்.
8. பாதுகாப்பான வலைதளங்களிலிருந்து மட்டுமே பொருள்களை வாங்க வேண்டும்.
9. பாதுகாப்பான ‘வைஃபை’ இணைய வசதியை மட்டுமே பயன்படுத்த வேண்டும்.

**- Dr. சூரியகலா குமார் Ph.D. புதுக்கோட்டை.**

உ ஓம் நமசிவாய

பில்லமங்களம் பைரவர் துணை பொன்னழகி அம்மன் துணை

# அறுபதாம் ஆண்டு நிறைவு மணி விழா



பொய்யாமணிப்பட்டியைச் சேர்ந்த (நாவலூருடையார்) சித. நடராஜன் செட்டியார் தெய்வத்திரு ந. ராஜாம்பாள் ஆச்சி தம்பதியரின் மகன் திரு ந. பாஸ்கரன் செட்டியார் – கவிதா ஆச்சி இவர்களுக்கு கார்த்திகை மாதம் 6–ஆம் நாள் (22–11–2022) செவ்வாய்க்கிழமை அன்று மாமன் – மைத்துனர் ஆகியோர்களின் முன்னிலையில் திருக்கடையூர் அருள்மிகு ஸ்ரீ அபிராமி அம்மன் சமேத அமிர்தகடேஸ்வரர் திருக்கோவிலில் 60–ம் ஆண்டு நிறைவு மணி விழா இனிதே நடைபெற்றது. வாழ்க வளமுடன்!

**தகவல் : திரு சித. நடராஜன் செட்டியார், பொன்னமராவதி.**

**Book Post - Printed Matter**

To

From

அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்
3, முதல் குறுக்குத் தெரு,
அழகப்பா காம்ப்ளக்ஸ் பின்புறம்,
மெயின்ரோடு ரோடு, **பொன்னமராவதி,**
புதுக்கோட்டை மாவட்டம் - 622 407.

SURYA SVK Cell : 98421 24415